*Kumaraṉ*

*Āram 17, muttu 32*

*March 21, 1940*

Record no. 313

REGD. NO. M. 1823.        12 பக்கங்கள்.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0
சிலோன் ரூ. 6–0–0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு
ஞு 1-க்கு ரூ. 7–0–0

# குமரன்

வியாழன்தோறும் வெளிவரும்        மாதப் பதிப்பும் சேர்ந்தது.        PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 17.        காரைக்குடி, பிரமாதி-ஞு பங்குனி-மீ 8-உ (21—3—40)        முத்து 32

# பூரண சுயேச்சைத் திறவுகோல்

## இந்தியாவின் லட்சியம் பூரண சுயேச்சையே

அகில இந்தியக் காங்கிரஸ் முகாமில் காதிப் பொருட்காட்சியைத் திறந்துவைக்கையில் மகாத்மா காந்தி பேசியதாவது:-

பூரண சுயேச்சைக்கான சூத்திரம் நம் வசமே இருக்கிறது. இந்த சூத்திரம் யாதெனில் கிராமக் கைத் தொழில்களுக்குப் புத்துயிரளிப்பதுதான். சுயராஜ்யத்துக்காகப் போராட்டமெதுவும் நடத்தத் தேவையே யில்லை. அதனையும் வகுப்பு ஒற்றுமையையும் நாம் வெகு சுலபமாக—அமைதியான வழியில் அடைய முடியும். இந்தியாவில் 7 லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. இந்நாட்டின் பொருளாதார நிலையை வெகுவாக விருத்தி செய்வதற்கு கிராமங்களின் நிலையை விருத்தி செய்தால் போதும். கிராம வாசிகளை அவர்களுடைய சக்திகளை உணரும்படி நாம் செய்ய வேண்டியது அவசியம். கிராம வாசிகள் வேலையற்றவர்களாகச் செய்யப்பட்டால், அவர்களைப் பிறர் ஏமாற்றி சுரண்டிவந்தால்—அதற்கு அவர்களது அறியாமையே பெரிதும் காரணமாகும். இந்த அறியாமையைப் போக்கவேண்டியதவசியம். முன் வாழ்ந்தது போல எப்பொழுதும் மனச் சோர்வுடன் வாழ வேண்டியதவசியமில்லை என்பதை கிராம வாசிகள் உணரும்படி செய்ய வேண்டும். தங்களது தேசம் எப்படி ஏமாற்றிச் சுரண்டப்படுகிறதென்பதையும் உணரும்படி செய்ய வேண்டும். இந்தியாவின் செல்வத்தைச் சுரண்டாமல் தடுப்பதற்குச் சிறந்த பலனுள்ள வழி கிராமக் கைத் தொழில்களுக்குப் புத்துயிரளிக்கும் வழிதான். பணக்காரர்களுக்கு இதில் பெரும் பொறுப்பு இருக்கிறது. அவர்கள் கிராமக் கைத் தொழில்களை ஆதரிப்பதன் மூலம் கிராம வாழ்க்கையை மேம்படுத்தவும் சிறப்புள்ளதாக ஆக்கவும் முடியும். அதிலும் ராட்டினத்தில் நூல் நூற்கும் தொழிலுக்குப் புத்துயிரளிப்பது தான் மிக்க பலனுள்ள வழி. சென்ற 50 வருஷங்களாக காங்கிரஸ் கிராம வாசிகளை விழித்து முன்னேறும்படி செய்ய முயலுகிறது.

இந்தியாவின் உண்மை நிலையை பிரதி பிம்பித்துக் காட்டுமிடங்கள் பம்பாய் நகரமோ அன்றி கல்கத்தா நகரமோ அல்ல. அவை அந்நியரால் சிருஷ்டிக்கப்பட்டவை. இந்தியாவின் உண்மை நிலையை பிரதி பிம்பித்துக் காட்டுமிடங்கள் இந்தியாவிலுள்ள 7 லட்சம் கிராமங்கள் தான். கிராம வாசிகள் பிறரை எதிர்பாராமல் தாங்களாகவே தங்களுடைய உணவையும் உடையையும் தயாரித்துக் கொள்ளுமாறு செய்ய வேண்டும். காதி—கிராமக் கைத் தொழில் திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றி வைத்தால் மேற்கண்ட நிலையை அடையலாம்.

## ‘கிராமக் கைத் தொழில் புனருத்தாரணமே’

கிராமக் கைத்தொழில் சாக்குகளை ஏற்றுமதி செய்ய முடியாதெனக் கூறப்படுகிறது. அவை ஏற்றுமதி செய்யப்பட வேண்டு மென்று நான் விரும்பவில்லை. எளிய கிராம மக்களுக்கு உண்பதற்கு வேண்டிய உணவும் உடுத்துவதற்கு வேண்டிய உடையும் கிடைக்கும்படியே நான் செய்ய விரும்புகிறேன். ஜனங்கள் இவ்விஷயங்களில் அதிகமான சிரத்தை காட்டி உழைப்பார்களென நம்புகின்றேன்.

★

பிறரது உதவியின்றி இந்தியாவை இந்தியர்களே ஆள முடியாதென்றும், ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டுப் போய் விட்டால் எல்லைப்புறத்திலுள்ள சில ஆஜானுபாகுவானவர்கள் இந்தியாவைத் தாக்கிக் கொண்டாட்ட வாழ்க்கை நடத்தக் கூடுமென்றும், பிரிட்டனின் யுத்த நடவடிக்கைகளுக்கு இந்தியா முட்டு கட்டை போடுமாயின் ஆங்கிலேயர் இந்தியா மீது ஆத்திரமடையக் கூடுமென்றும், இந்தியாவை, நாசிகளோ போல்ஷிவிக்கர்களோ கைப்பற்றக் கூடுமென்றும், ஒரு ஆங்கில நண்பர் எழுதியுள்ள கடிதத்திற்கு காந்திஜி வரைந்துள்ள பதிலின் சில பகுதிகள் கீழ் வருமாறு:—

இக்கடிதம் இந்தியரின் மனப்போக்கைப்பற்றி ஆங்கிலேயரிடையே யுள்ள கொடிய அறியாமையை நிரூபிக்கிறது. இந்தியாவின் லட்சியம் பூரண சுதந்தரம் தானென பல்லாயிரக் கணக்கான முறை வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. இந்தியா சாம்ராஜ்யத்திலிருந்து விலகிக் கொள்வதற்கான உரிமையுடன் குடியேற்ற நாட்டு அந்தஸ்து அளிக்கப்படுமாயின் என் சம்பந்தப்பட்ட வரை அதை ஏற்றுக் கொள்வேன். அக்கருத்துக்கு வேறு யாரையும் கட்டுப்படுத்த எனக்கு உரிமையில்லை. பிரிட்டன் அவ்வந்தஸ்தை அளிக்க முன்வரவில்லை. என்னைப்பற்றி என்ன சொல்ல இடமிருந்த போதிலும், தனது கொள்கையை மாற்றிக்கொண்டதாகக் காங்கிரஸ் மீது குற்றஞ்சாட்ட இடமில்லை. பின்னர் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தின் மூலமும் ஆழ்ந்த யோசனையின் பலனாகவும் வெஸ்ட் மினிஸ்டர் சட்டத்தை யொட்டிய குடியேற்ற நாட்டு அந்தஸ்து கூட இந்தியாவுக்குப் பொருந்தா தென நான் திட்டமாக நம்புகின்றேன். சமீபத்தில் தான் எனது அபிப்பிராய மாறுதல்களுக்கான காரணங்களை வெளியிட்டேன். இந்தியா பிறரது உதவியை எதிர்பார்க்கும் அவசிய மில்லாத நிலைமையை அடையவில்லையென சொல்லப்படுவதன் மூலம் இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டந்தஸ்து கூட கொடுப்பதற்கில்லை யென்பதே கருத்தெனத் தோன்றுகிறது. ஆங்கிலேயர்கள் தங்கள் சொந்த விஷயங்களில் பரம திருப்தியடைந்திருப்பதால் அவர்கள் இந்தியப் பிரச்னையைப்பற்றி அறிந்து கொள்ள சிரமப்படுவதில்லை.

இந்தியப் போராட்டம் பிரிட்டிஷாருக்கு விரோதமானதல்ல வென்பதை ஒருவரும் மறக்கக் கூடாது. சுரண்டலையும் அந்நிய ஆட்சியையும் எதிர்த்தே இந்தியா போராடுகிறது, அந்நியரை எதிர்த்தல்ல. சுதந்திரம் பெறுவதன் மூலம் இந்தியா அறிவு விசாலமடைந்து தற்காப்பைக் கற்றுக் கொள்ளட்டும். இதைத் தவிர வேறு ஏதாவது ஒரு மார்க்கத்தைத் தேடினால் அதன்பயனாக சதா காலத்துக்கும் திக்கற்ற [illegible] நிலையும் அந்நிய ஆதிக்கமும் [illegible] கொண்டே தானிருக்கும்.

## ஆங்கில நண்பருக்கு காந்திஜியின் பதில்

திக்கற்றுக் கிடக்கும் [illegible] கூடிய சோறுற்ற [illegible] உலகிற்கும் சரி, பெரும் [illegible] காட்டிலும் சுதந்திரம் பெறுவதற்கான முறையில் [illegible] வருதான் அதற்கும் [illegible] உலகிற்கும் நல்லது.

அஹிம்சை விஷயத்தில் யார் [illegible] புக் காட்டுகிறார்களோ [illegible] அதைப் பிரயோகிப்பதே அஹிம்சையின் சக்தியைச் சோதிப்பதற்கு [illegible] மார்க்கமாகும். பூரண அஹிம்சை [illegible] காட்டி அதன் மூலம் இந்தியாவையும் உலகையும் காக்க நான் முயல்கிறேன்.

ஆங்கிலேயர் விலகினும் [illegible] முஸ்லிம்களும் சமாதானத்துடன் வாழ்ந்தால்தான் லாபமுண்டு என்பதை உணருவார்கள். பிரிட்டிஷார் வருவதற்கு முன் அவர்கள் இப்படித் தானிருந்தார்கள். [illegible] நாமாக சச்சரவு இருந்த [illegible] யிருந்தால் யாராயினும் ஒருதரப்பார் மறைந்திருக்க வேண்டும். [illegible] சுயேச்சை, இந்தியாவுக்குக் கிடைத்துவிட்டால் நாட்டின் அபிப்பிராயத்தை [illegible] நச் சொல்லுவதற்குக் காங்கிரஸ் [illegible] நிலைக்க முடியாது. பிரிட்டனின் [illegible] பலம் இயற்கையான மனித சுபாவத்தையே மாற்றி வருகிறது. அடக்குவோரையும் அடக்கப்படுவோரையும் அது பாழ்படுத்தி வருகிறது. பிரிட்டிஷ் படைகள் [illegible] தம் சக்கரில் நடந்த [illegible] ளவா? பிரிட்டிஷார் உதவி [illegible] யிருந்தாலும் அது நடந்த [illegible] கிடைக்கிறது. கஷ்டமடைந்தவர்களுக்கும் பூரண உதவி யளிக்கவும் முடிகிறதில்லை.

ஆங்கிலேயர்கள் தங்கள் சுதந்தரத்தை [illegible] நிலை [illegible] எவ்வளவோ [illegible] செய்கிறார்கள். அவர்கள் இந்தச் [illegible] தில் இந்தியாவின் கஷ்டத்தைக் [illegible] யாமலிருக்கக் கூடாது.

## சென்னை ரேடியோ

### மார்ச் 22உ வெள்ளி

1·00–1·30 கல்பகம் சகோதரிகள் பாட்டு
1·35–2·00 } 8·30–9·00 } ஸ்ரீமதி கே. லலிதா புல்லாங் குழல்
2·00–2·30 } 4·00–4·30 } ஸ்ரீ எஸ். பிஞகபாணி பாட்டு
5·20–6·00 } 7·50–8·30 } மன்னார்குடி ஸ்ரீ ராஜகோபால பிள்ளை ஷை
6·05–6·30 ஸ்ரீமதி எஸ். லக்ஷ்மி வீணை
6·30–7·00 } 9·45–10·30 } ஸ்ரீமதி எம். எஸ். மோஹனாம்பாள் பாட்டு

★

### 23உ சனி

1·00–1·30 } 6·05–6·30 } ஸ்ரீமதி வி. எஸ். சாரதாம்பாள் பாட்டு
1·35–2·00 ஸ்ரீ எம். ஆர். கோபாலரத்னம் ஷை
5·20–6·00 } 6·30–7·00 } ஸ்ரீ ஜி. கல்யாணராமய்யர் ஷை
8·10–9·00 பங்களூர் ஸ்ரீமதி நாகரத்தினம்மாள் ஷை

★

### 24உ ஞாயிறு

1·00–1·30 } 4·00–4·30 } ஸ்ரீ கே. எஸ். நாகராஜன் பாட்டு
1·35–2·00 } 10·00–10·30 } ஸ்ரீ எஸ். ராம ஐயர் புல்லாங்குழல்
2·00–2·30 ஸ்ரீ ஏ. சாந்திவர்த்தன வீணை
5·20–6·00 ஸ்ரீ ஆனை வைத்தியநாதய்யர் பாட்டு
6·05–6·30 } 9·30–10·00 } முடிகொண்டான் ஸ்ரீ ஸபாபதி ஐயர் ஷை
7·50–8·30 ஸ்ரீமதி சாரநாயகி ஷை
8·30–9·00 ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி பிடில்

★

### 25உ திங்கள்

1·00–1·30 } 5·20–6·00 } வாகூர் ஸ்ரீ முத்துஸ்வாமி ஐயர் பிடில்
1·35–2·00 } 6·05–6·30 } ஸ்ரீமதி கே. பார்வதி அம்மாள் பாட்டு
7·50–9·00 செம்பை ஸ்ரீ வைத்தியநாத பாகவதர் ஷை
10·00–10·30 ஸ்ரீமதி டி. எஸ். ஞானம்பாள் ஷை

★

### 26உ செவ்வாய்

1·00–1·30 குமாரி அனுஸூயா பாட்டு
2·00–2·30 } 4·00–4·30 } ஸ்ரீ என். ராமநாதய்யர் ஷை
5·20–6·00 } 8·30–9·00 } ஸ்ரீ கே. ஏ. ராதாகிருஷ்ண பிள்ளை ஷை
6·05–6·30 ஸ்ரீமதி ஆர். ருக்மிணி ஷை
6·30–7·00 "வேதாள உலகம்" தமிழ் நாடகம்
7·50–8·30 } 9·30–10·00 } கீரனூர் ஸ்ரீமதி கே. எஸ். ஜயலக்ஷ்மி புல்லாங்குழல்
10·00–10·30 ஸ்ரீ வி. சேதுராமய்யர் பிடில்

★

### 27உ புதன்

1·00–1·30 } 6·05–6·30 } பண்ருட்டி சகோதரிகள் பாட்டு
1·35–2·00 } 9·30–10·30 } த்வாரம் ஸ்ரீ நரசிங்க ராவ் பிடில்
2·00–2·30 } 4·00–4·30 } மினக்கல் ஸ்ரீ சுப்ரமண்யம் பாட்டு
5·20–6·00 ஸ்ரீ ஏ. பார்த்தசாரதி நாதஸ்வரம்
7·50–9·20 பாருபள்ளி ஸ்ரீ ராமகிருஷ்ணய்யர் பாட்டு

★

### 28உ வியாழன்

1·00–1·30 } 5·20–6·00 } ஸ்ரீ பி. நாராயணஸ்வாமி பிள்ளை பாட்டு
2·00–2·30 } 9·30–10·30 } ஸ்ரீ எஸ். எம். ராமஸ்வாமி ஐயங்கார் வீணை
4·00–4·30 ஸ்ரீமதி வி.எஸ். ராஜம் பாட்டு
6·05–6·30 கோலார் ஸ்ரீமதி ராஜம்மா ஷை
5·00–5·10 } 6·30–7·00 } "சாரதி பிலிம்ஸ் வாத்ய கோஷ்டி
7·50–9·15 "விக்டோரியா மகாராணியின் மதராஸ் ஸாபர்ஸ் & மைனர்ஸ்" 1780ல் திரட்டப்பட்ட தென்னிந்திய பட்டாளத்தின் சரித்திரம்.

## வாக்காளர் ஜாப்தாவில் பிசகு வராமல் தடுக்க

சொத்து வரியோ வீட்டு வரியோ கொடுப்பவர் தம் சொத்து உரிமையைப் பிறருக்கு மாற்றும் விஷயம் குறிப்பிட்ட காலத்திற்குள் முனிசிபல் கமிஷனருக்கோ அல்லது லோக்கல் போர்டுத் தலைவருக்கோ தெரிவிக்கப்படாததால், ஸ்தல ஸ்தாபன வரி ரிஜிஸ்தர்களிலும் அவற்றின் மூலம் வாக்காளர் ஜாப்தாக்களிலும் பிசகுகள் ஏற்படுகின்றன. இதைத் தடுக்கும் நோக்கத்துடன் சென்னை சர்க்கார் ஒரு புது உத்தாவைப் பிறப்பித்திருக்கிறார்கள். ஒவ்வொரு சப் ரிஜிஸ்திராரும் இத் தகவல்களை உடனுக்குடன் முனிசிபல் கமிஷனருக்கும் லோக்கல் போர்டுத் தலைவருக்கும் தெரிவிக்க வேண்டும். இதற் கேற்படும் தபால் செலவு முதலியவற்றிற்காக, சர்க்காருக்கு நகர சபைகளும் பஞ்சாயத்து போர்டுகளும் வருடந்தோறும் ஒரு தொகை கொடுக்க வேண்டும். 200 ரூபாய்க்கு மேல் வருமானம் வரும் பஞ்சாயத்து போர்டுகள் வருடம் 5 ரூபாயும் 30,000 அல்லது அதற்குக் குறைவாக ஜனத்தொகை உள்ள நகர சபை 15 ரூபாயும், அதற்கு மேல் லட்சத்திற்குட்பட்ட ஜனத்தொகை உள்ளவை 30 ரூபாயும், அதற்கு மேலுள்ளவை 90 ரூபாயும் சொடுக்க வேண்டுமென்று இவ்வுத்தாவு குறிப்பிடுகிறது. 200 ரூபாய் அல்லது அதற்குக் குறைந்த வருமானமுள்ள பஞ்சாயத்து போர்டுகள் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை.

### கால் நடைப் பிரயாணம்

அஸ்ஸாம் மாகாணத்தைச் சேர்ந்த ஸ்ரீ சரபேஸ்வர தேக்கா என்ற காங்கிரஸ்காரர் இந்தியா முழுமையும் கால்நடையாகவே சுற்றி வருவது என்ற நோக்கத்துடன் சென்ற ஏப்ரலில் புறப்பட்டவர் இப்பொழுது பம்பாய் போய்ச் சேர்ந்திருக்கிறார். வங்காளம், பீஹார் இரு மாகாணங்களிலும் சுமார் 2,000 மைல் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறார்.

## 'சிங்களவரும் இலங்கைக்கு அந்நியர்தான்'

குருணாக்கலை ஜில்லா தோட்ட முதலாளிகள் சங்க வருஷக் கூட்டத்தில் சங்கத் தலைவர் பேசும்போது குறிப்பிட்டதாவது:

"இந்தியர்கள் எல்லோரையும் வெருட்டியடித்தால்தான் இலங்கைத் தீவு சுபிட்சமாயிருக்க முடியுமென்று சிங்களத் தலைவர்கள் சாதிக்கிறார்கள். இந்தியர்களை அந்நியர்களாகவும் மதித்து நடத்துகிறார்கள். உண்மையைக் கவனிக்கப் போனால் இந்தியர்களைப்போல சிங்களவர்களும் இத் தீவுக்கு அந்நியர்தாம். அந்நியர்களை நாடு கடத்துவதாயிருந்தால் இந்தியர்கள் எல்லோரையும் தென்னிந்தியாவிற்கும், ஐரோப்பியர்களைச் சீமைக்கும் திருப்பி அனுப்பிவிட வேண்டும். சிங்களவர்களை, ஆரம்பத்தில் இருந்து வந்த வட இந்தியாவிற்குத் திருப்பி அனுப்பிவிட வேண்டும். இதுதான் இலங்கைப் பிரச்னைகள் தீரக் குறுக்கு வழியாகத் தோன்றுகிறது."

### முனிசிபாலிடியில் யுத்த அலவன்ஸ்

பிப்ரவரி முதல் தேதியிலிருந்து டிசம்பர் 31 தேதிவரை முனிசிபாலிடியில் வேலை செய்யும் 5,409 பேர்கட்கும் யுத்த அலவன்ஸ் கொடுப்பதென ஆமதாபாத் முனிசிபாலிடி தீர்மானித்திருக்கிறது. இதன் மூலம் மாதம் ரூ 10,500 முனிசிபாலிடிக்குச் செலவேற்படும். 30 ரூபாயும் அதற்குக் குறைவாகவும் சம்பளம் வாங்குபவர்கட்கு 2 ரூபாயும் மற்றவர்கட்கு நான் ஒன்றுக்கு 1 அணாவும் அலவன்ஸ் கிடைக்கும்.

### தமிழ் வித்வானுக்குப் பட்டம்

திருவாடுதுறை ஆதீனம் வித்வான் ஸ்ரீ தே. பெரியசாமிப் பிள்ளைக்கு ஜகத்குரு சங்காராச்சாரிய ஸ்வாமிகள் "தெய்வத் தமிழ் கவிகுல சிகாமணி" என்ற உயரிய பட்டத்தையும் சால்வை முதலியனவும் கொடுத்து சிறப்பித்தார்.

## திருச்சி ரேடியோ

### மார்ச் 22உ வெள்ளி

1·35–2·00 ஸ்ரீ டி. எஸ். வெங்கடாசலம் பிள்ளை பிடில்
2·30–3·00 } 6·30–7·00 } மன்னார்குடி ஸ்ரீ ஆர். சாம்பசிவன் பாட்டு
5·20–6·00 } 7·50–8·30 } ஸ்ரீ பி. சிவசுப்ரமண்ய பிள்ளை நாதசுரம்
8·30–8·45 "சப்தமும் காதலும்"-நாடகம்
8·45–9·20 } 9·45–10·30 } ஸ்ரீமதி நீலம்மா கடம்பி வீணையும் பாட்டும்

★

### 23உ சனி

1·35–2·00 ஸ்ரீ கே. பி. சுப்ரமண்ய ஐயர் பாட்டு
2·30–3·00 "கம்பர் தினம்"-ஒரு விசேஷ நிகழ்ச்சி
5·20–6·00 ஸ்ரீ வி. என். ராவ் வீணை
6·30–7·00 } 8·30–9·20 } ஸ்ரீ கீவளூர் சுந்தரம் பிள்ளை பாட்டு
7·50–8·30 } 9·45–10·30 } ஸ்ரீ பாபா கே. எஸ். வெங்கடராமய்யர் பிடில்; தஞ்சை ஸ்ரீ ராமதாஸ் பிடில்

★

### 24உ ஞாயிறு

1·35–2·00 } 6·30–7·00 } ஸ்ரீமதி டி. ஸூர்ய குமாரி பாட்டு
2·00–3·00 } 5·20–6·00 } ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி நடராஜன் ஷை
7·50–9·20 ஸ்ரீ கே. எஸ். நாராயண ஐயங்கார் கோட்டுவாத்தியம்

★

### 25உ திங்கள்

1·35–2·00 ஸ்ரீ ஏ. எஸ். ராமகிருஷ்ண ஐயர் பாட்டு
5·20–6·00 பொம்பலூர் ஸ்ரீ என். அங்கப்ப பிள்ளை நாதஸ்வரம்
6·30–7·00 } 9·45–10·30 } ஸ்ரீமதி எஸ். ரங்க நாயகி வீணையும் பாட்டும்
7·50–9·20 பல்லடம் ஸ்ரீ சஞ்சீவி ராவ் புல்லாங்குழல், ஸ்ரீ பாபா வெங்கட்ராமையர் பிடில், கோயம்புத்தூர் ஸ்ரீ ராஜப்பையர் மிருதங்கம்

★

### 26உ செவ்வாய்

1·35–2·00 ஸ்ரீ ஏ. ராகவாச்சாரி பாட்டு
5·20–6·00 திருக்கோடிக்காவல் ஸ்ரீ ஆர். கிருஷ்ணமூர்த்தி ஐயர் பிடில்
6·30–7·00 } 8·50–9·20 } ஸ்ரீமதி காமு அம்மாள் வீணை
7·50–8·30 } 9·45–10·30 } பாலக்காடு ஸ்ரீ ராம பாகவதர் பாட்டு

★

### 27உ புதன்

1·35–2·00 ஸ்ரீ வி. ராஜாராம ஐயர் பிடில்
5·20–6·00 பட்டமங்கலம் ஸ்ரீ சாம்பசிவ ஐயர் வீணை
6·30–7·00 } 9·45–10·30 } ஸ்ரீ ஏ. சுப்ரமண்யம் பாட்டு
7·50–9·20 அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்கார் பாட்டு, வித்வான் ராஜமாணிக்கம் பிள்ளை பிடில், பழனி ஸ்ரீ சுப்ரமண்ய பிள்ளை மிருதங்கம்

★

### 28உ வியாழன்

1·35–2·00 } 2·30–3·00 } ஸ்ரீ எம். ராமச்சந்திரன் பாட்டு
5·20–6·00 பல்லடம் ஸ்ரீ நாகராஜ ராவ் புல்லாங்குழல்
6·38–7·00 } 9·45–10·30 } ஸ்ரீமதி ஜி. சென்னம்மா பாட்டு
7·50–9·15 சென்னையிலிருக்கிறபடி

### ரேடியோ லைசென்ஸ்

இந்தியாவில் ரேடியோ அபிமானிகளின் தொகை நாளுக்குநாள் அதிகரித்த வண்ணமாகவே இருந்துவருகிறது. இந்த வருடம் ஜனவரி மாதத்தில் மொத்தம் 10,225 லைசென்ஸ்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ் வருடம் ஜனவரி மாத முடிவில் அமுலிலிருந்த லைசென்ஸ்தாரர்களின் தொகை 93,427. சென்ற வருஷம் ஜனவரி மாத முடிவில் 68,645 லைசென்ஸ்தாரர்களே இருந்தார்கள். இவ் வருஷத்தில் 24,782 லைசென்ஸ்தாரர்கள் அதிகரித்திருக்கின்றனர்.







# காடு இருந்த இடம் காங்கிரஸ் நகராயிற்று

### வரவேற்பு வைபவம் (மார்ச், 15உ)

மஷர்புரியில் இன்று அமோகமான உற்சாகம். தலைவர் ஆஸாத் வந்துசேர்ந்தார். மூவாயிரம் தொண்டர்களும் ஆயிரம் கிராமவாசிகளும் அணிவகுத்து நின்றனர். தாரை தம்பட்டங்கள் முழங்கின; தேசிய கீதங்கள் பாடப்பட்டன; வரவேற்புக் கமிட்டியார் வரவேற்றனர். மயில் போன்று அலங்கரிக்கப்பட்ட ஆசனத்தில் தலைவர் அமர்ந்தார்; ஊர்வலம் காங்கிரஸ் நகரை நோக்கிப் புறப்பட்டது. இந்தக் காட்சி கண்கொள்ளாததாக இருந்தது. மூன்று மைல் நீளமான ராஞ்சி ரோட் பூராவும் ஒரே ஜன சமுத்திரம். ஊர்வலத்தின் முன்னும் பின்னும் தொண்டர்கள் அணிவகுத்துச் சென்றனர். ஊர்வலம் காங்கிரஸ் நகரின் பிரதான வாயிலையடைந்தது. ஆயிரக்கணக்கான பெண்கள் ஒரே ஆரஞ்சு நிறப் புடவை யுடுத்தி ஆஸாதை வரவேற்ற காட்சி ரம்மியமானது.

### பொருட் காட்சி

பொருட் காட்சியின் பிரதம வாயில் 9ம் நூற்றாண்டிலிருந்தது போன்ற சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடியதாக இருக்கிறது. பொருட் காட்சியிருக்குமிடம் 6,25,000 சதுர அடி விஸ்தீரண முடையது. 63 கதர்க் கடைகள். பிரதமவாயிலுக் கெதிரில் சூத்ரவேதி இருக்கிறது. இதில் பல தினுசுக் கதர்களிருக்கின்றன. நேபாள சர்க்கார் கையால் காகிதம் செய்யும் முறையை நிதர்சித்துக் காட்டுகின்றனர். வைத்தியத்திற்கான மூலிகைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. அகில இந்திய கிராமக் கைத் தொழில் சங்கத்தார் புதிய விளக்கொன்றைத் தயாரித்திருக்கிறார்கள். காய் கறிகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட எண்ணெயால் எரிகிறது. பிரகாசமான வெளிச்சம். பொதுவாக இந்த வருடப் பொருட் காட்சி, அதிகப்படியான அநேக அம்சங்களைப் பெற்றிருக்கிறது. இந்தப் பொருட் காட்சியை காந்திஜி திறந்துவைத்தார்.

### காரியக் கமிட்டிக் கூட்டம்

காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் இன்று பகல் 2 மணிக்கு ஆரம்பமாயிற்று. டாக்டர் ராஜேந்திர பிரசாத் தலைமை வகித்தார். கமிட்டியினர் பாட்னா கூட்டத்துக்குப் பின் நடந்த சம்பவங்களைப் பரிசீலனை செய்தனர். இப்போதும் மகாத்மாவிடமே பொறுப்பு விடப்பட்டிருக்கிறது. "ஒரே பேச்சு வேண்டும்; ஒரே தலைவர் வேண்டும்" என்றே தலைவர்கள் கூறுகின்றனர்.

வழக்கத்துக்கு விரோதமாக மகாத்மா காந்தி இந்த வருஷக் காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் பேசுவார்.

"காந்திஜியிடம் நம்பிக்கை வைத்து அவர் காட்டிய வழியைப் பின்பற்றுங்கள். அதுதான் நாம் தற்சமயம் செய்யவேண்டிய வேலை" என்று தலைவர்கள் எல்லோருக்கும் சொல்லுகிறார்கள்.



## 'மூன்றுவது ஆசாமிகள் இருக்கும் வரை வகுப்புப் பிரச்னை தீராது'

### "போராட்டம் ஒன்றே நமக்கிருக்கும் வழி"

★

### பார்மியப் பிரதிநிதிகள் (மார்ச், 16உ)

இன்று காலை காரியக் கமிட்டி கூடியது. பாட்னா தீர்மானத்தையே காங்கிரசில் எவ்வித மாறுதலுமின்றி நிறைவேற்றிவிடத் தீர்மானித்தனர். பர்மிய தேசிய சபைத் தூதகோஷ்டியினர் ரங்கூனிலிருந்து ராம்கார் வந்திருக்கின்றனர்.

### பூர்வ குடிகள் நாட்டியம்

சோடா நாகபுரியைச் சேர்ந்த பூர்வ குடிகள் ராம்காரில் கூடி நாட்டியமும் கச்சேரியும் நடத்தினர்.

### அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் (மார்ச், 17உ)

இன்று பகல் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் ஆரம்பமாயிற்று. அங்கத்தினர்களும் விசிட்டர்களும் ஏராளமாகக் கலந்து கொண்டனர். காரியக் கமிட்டி அங்கத்தினரல்லாத ராஜாஜி, யாகுப் ஹாசன், கெர், விஸ்வநாததாஸ் முதலியோரும் மேடைமீது அமர்ந்திருந்தனர். வந்தேமாதர கீதம் பாடப்பட்டதும் வருஷாந்த அறிக்கையும் வரவு செலவு கணக்குகளும் படிக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டன.

பண்டித நேரு காரியக் கமிட்டி சார்பாக பதவியிலிருந்து ராஜன் பாபு செய்த ஊழியங்களைப் பாராட்டுவதாக ஒரு பிரேரபணை கொண்டு வந்தார். பிரேரபணை உற்சாகத்துடன் நிறைவேறியது. ராஜன் பாபு பதிலளித்தார்.

பின்னர் ராஜன் பாபு மௌலானா ஆஸாதுக்கு மாலை சூட்டி தலைவர் பதவியை ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். தலைவருக்கான சின்னத்தை ராஜன் பாபு மௌலானாவின் சட்டையில் குத்தினார். மௌலானா தம்மைத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததற்கு நன்றி செலுத்தினர். காங்கிரசில் நிறைவேற்றப்பட வேண்டிய-பாட்னாவில் தீர்மானிக்கப்பட்ட-தீர்மானத்தை ராஜன் பாபு இங்கே படித்தார்:

### தீர்மானம்

தீர்மானத்தின் முக்கிய பகுதிகள் வருமாறு:—

இதுவரை காரியக் கமிட்டியும், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் நிறைவேற்றிய தீர்மானங்களையும் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளையும் இக் காங்கிரஸ் அங்கீகரிக்கிறது.

இந்திய மகாஜனங்களைக் கலக்காமலே இந்தியாவை யுத்தத்தில் ஈடுபட்ட நாடாக் பிரிட்டிஷ் சர்க்கார் கூறுவதும், யுத்தத்தில் இந்தியாவின் செல்வங்களை உபயோகிப்பதும் சரியன்று. இந்திய விஷயமாகப் பிரிட்டிஷாரின் மனோபாவம் இன்னதென சமீபத்தில் வெளியிடப்பட்ட அறிக்கைகளைக் கவனித்தால், கிரேட் பிரிட்டன் தனது ஏகாதிபத்தியத்தைப் பெருக்கிக்கொள்ளவே இந்த யுத்தத்தை நடத்தி வருவதாகத் தெரிகிறது. அந்த ஏகாதிபத்தியம் இந்திய மக்களின் செல்வ நிலைமையைச் சுரண்டி வருகிறது. ஆகையால் காங்கிரஸ் எவ்விதத்திலும் நேர் முகமாகவோ, மறை முகமாகவோ யுத்தத்தில் சம்பந்தப்பட முடியாது. இந்தியத் துருப்புகள் பிரிட்டன் சார்பாகப் போராடுவதையும் காங்கிரஸ் அங்கீகரிக்கவில்லை. யுத்தத்திற்காக இந்தியாவிலிருந்து ஆளும் பணமும் போவதை பலமாக ஆட்சேபிக்கிறது.

பூரண சுதந்திரத்துக்குக் குறைந்த எதையும் இந்திய மக்கள் ஏற்றுக்கொள்ள முடியாதெனக் காங்கிரஸ் அறிவிக்கிறது. குடியேற்ற நாட்டந்தஸ்தோ அல்லது ஏகாதிபத்திய முறைக்கு உட்பட்ட வேறு எந்த அந்தஸ்தோ இந்தியாவுக்கும் சிறிதும் பொருந்தாது.

ஒரு அரசியல் நிர்ணய சபை மூலம் இந்திய மக்களே தங்களுக்குத் தேவையான அரசியலை அமைத்துக்கொள்ளக் கூடும். வகுப்புப் பிரச்னைக்கு ஒரு அரசியல் நிர்ணய சபை மூலமே திருப்திகரமான பரிகாரம் ஏற்படக்கூடுமெனக் காங்கிரஸ் கருதுகிறது.

இந்திய சுயேச்சைக்குக் குறுக்கே நிற்க சமஸ்தானாதிபதிகளுக்கோ அல்லது விசேஷ பாத்தியதைகளைக் கொண்டாடும் வெளிநாட்டவர்க்கோ உரிமை இருப்பதாகக் கூறப்படுவதைக் காங்கிரஸ் ஏற்க முடியாது. இந்தியாவின் அரசுரிமை ஜனங்களுக்கே இருக்கவேண்டும். அவர்கள் மாகாணங்களில் வசிப்பவர்களாயினும் சரி, சமஸ்தானப் பிரஜைகளாயினும் சரி அதைப்பற்றி அக்கரையில்லை. அந்நிய ஆட்சியிலிருந்து விடுபட்டாலொழிய சமஸ்தானப் பிரச்னையைத் திருப்திகரமாகத் தீர்க்கமுடியாதென்று காங்கிரஸ் கருதுகிறது. யுத்தத்தில் கலக்காமலிருப்பதற்காகவும், அன்னிய ஆதிக்கத்திலிருந்து இந்தியாவை விடுவிக்க வேண்டுமென்ற காங்கிரசின் உறுதியை வற்புறுத்துவதற்காகவும் காங்கிரஸ் மந்திரி சபைகளை வாபீஸ் பெற்றது. இது முதல்படி. இதைத் தொடர்ந்து சட்ட மறுப்பு நடக்கவேண்டும். காங்கிரஸ் தயாராக இருப்பதாகக் கருதப்பட்டவுடன் காங்கிரஸ் தயங்காமல் சட்டமறுப்பில் இறங்கும். அல்லது அதற்கு முன்னதாகவே நெருக்கடி ஏற்பட்டால் அப்பொழுது சட்டமறுப்பு ஆரம்பிக்கப்படும். காங்கிரஸ்காரர்கள் பூரணக் கட்டுப்பாட்டை வளர்த்து சுயேச்சைப் பிரதிக்ஞை குறிப்பிடப்பட்டுள்ள நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றி வைத்திருப்பதாக காந்திஜிக்குத் திருப்தி யேற்பட்டால்தான் சட்டமறுப்பைத் தொடங்குவதற்கான பொறுப்பைத் தாம் ஏற்றுக்கொள்ள முடியுமென காந்திஜி கூறியுள்ள நிபந்தனையைக் காங்கிரஸ்காரர்கள் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறது.

மேற்கண்ட தீர்மானத்தை அனுஷ்டானத்துக் கொண்டுவரத் தக்க நடவடிக்கை யெடுத்துக்கொள்ள காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரம் கொடுக்கிறது.

தீர்மானத்தின்மீது ராஜன் பாபு பேசினர். தமது பேச்சினிடையே பின் வருமாறு கூறினர்:

"பிரிட்டனைப் புண்படுத்த நமக்கு எண்ணமில்லை யென்பதை நாம் வெகு தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறோம். நாம் வேண்டியதெல்லாம் நமது பிறப்புரிமையாகிய சுயேச்சையே. எவருடைய கஷ்டத்தைக் கொண்டும் நாம் முன்னேற விரும்பவில்லை. ஆனால் நாம் முன்னேற்றமடைவதால் பிறர் வீழ்ந்து விடுவார்களானால் நாமென்ன செய்ய விருக்கிறது?"

இந்தியாவிலுள்ள வித்தியாசங்களைக் குறித்துப் பேசும்போது "சுய நிர்ணயத்துக்கு நமக்கு உரிமை உண்டு என்பதைப் பிரிட்டன் அங்கீகரிக்குமானால் இந்த

(இதன் தொடர்ச்சி 6-ம் பக்கம்)

## முகாந்திரம் தெரிவிக்க நோட்டீஸ்.

### தட்டோன் டிஸ்டிரிக்ட் கோர்ட்டு.

சிவில் ரெகுலர் நிர். 8/1936
சிவில் எக்ஸிகியூஷன் நிர். 2 M/1939.

திவான் பகதூர் S. RM. CT. S. சபாரெத்தினம் செட்டியார் வகையரு 4 பேர் டிகிரி ஹோல்டர்கள் } மனுதார்கள்.

S. T. நாகப்ப செட்டியார் வகையரு 5 பேர் ஜட்ஜ் மெண்டு கடன்காரர்கள் } ரெஸ்பாண்டென்டுகள்

புதுக்கோட்டை ஸ்டேட் ராமச்சந்திரபுரத்திலிருக்கும் பாங்கர்களான (2) S. T. முத்தையா செட்டியார், (3) S. T. சொக்கலிங்கம் செட்டியார், (4) ராமய்யா செட்டியார் என்ற S. T. ராமனுதன் செட்டியார், (5) S. T. அண்ணாமலை செட்டியார் இந்த நான்குபேர்களுக்கும் நோட்டீஸ்—

ஆடர் 34-ன்படி டிக்கிரி பாக்கி ரூ 22,274-11-0க்கு personal டிகிரியும் மேலும் வருஷம் ஒன்றுக்கு 9 % வீதம் வட்டியும் உத்திரவாகக் கோரி ஷை டிக்கிரி ஹோல்டர்களாகிய மனுதார்கள் இக் கோர்ட்டாருக்கு மனுச் செய்து கொண்டிருப்பதில்,

நீங்கள் இக்கோர்ட்டாரவர்கள் முன், 6—4—40 சனிக்கிழமை முற்பகல் 10 மணிக்கு நேரிலாவது உங்கள் இன்ஸ்ட்ரக்ஷன் பெற்ற அட்வொகேட் அல்லது ப்ளீடர் மூலமாகவாவது ஆஜராகி ஷை மனுவுக்கு உங்கள் ஆக்ஷேபனைகளைத் தெரிவித்துக்கொள்ள வேணும். தவறினால் உங்களை யன்னியில் கேஸை விசாரித்து முடிவுசெய்யப்படும்.

12—3—40ல் இக்கோர்ட்டாரவர்கள் கையெழுத்தும் முத்திரையும் இதில் போடப்பட்டது.

கோர்ட்டு முத்திரை.

உத்திரவுப்படி,
(Sd) Ba Ba,
சீப் கிளார்க்,
டிஸ்டிரிக்ட் & செஷன்ஸ் ஜட்ஜ்,
தட்டோன்.

Bleed through.

## பர்மா நிலம் வாங்கும் மசோதா

### திரு. வெள்ளையன் செட்டியார் எதிர்ப்பு

பர்மா ஜனப் பிரதிநிதி சபையில் பிப்ரவரி 28உ. யன்று பர்மா நிலம் வாங்கும் மசோதா ஆலோசனைக் கெடுத்துக்கொள்ளப்பட்டது. மசோதா சம்பந்தமாக டா-சோ நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அதில் செலக்ட் கமிட்டி அங்கத்தினர்களின் மறுப்புரைகளுக்கு ஒருவாறு பதிலளிக்க முயன்ருர். சில ஆண்டு களுக்குள் அரசாங்கம் கடன் வாங்காமலே இம்மசோதாவை அமுலுக்குக் கொண்டு வரும் நல்ல நிலையில் அரசாங்கத்தின் செல்வ நிலை இருப்பதாகக் குறிப்பிட்டார்.

மசோதாவை எதிர்த்து திரு. அ. மு. மு. வெள்ளையன் செட்டியார் பேசியதன் சில பகுதிகள் வருமாறு:—

இத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு பணம் எங்கிருந்து வரும் என்பதை விளக்கவில்லை. நமக்கு தெரிந்த வரையில் இவ்வாண்டு வரவு-செலவு திட்டத்தில் குறைவு ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பிய யுத்தத்தை முன்னிட்டும், மற்றும் இதர காரணங்களை முன்னிட்டும், இத்தேச வருமானம் அதிகரிப்பதற்கு வழியில்லை. இத்தேசத்தில் விவசாயம் செய்வதற்குரிய நிலங்கள் ஏராளமாயிருக்கின்றன வென்று உத்யோக அறிக்கைகள் கூறுகின்றன. அரசாங்கத்திற்கும் விவசாயிகளுக்கும் எத்தகைய செலவுமின்றி இந்த நிலங்களை விவசாயிகள்வசம்ஒப்புவிக்கலாம். இந்த விவசாயிகளோடு நெருங்கிப் பழகி, அவர்களுக்கு உதவிசெய்யும் சமூகத்தைச் சார்ந்தவன் நான். ஆதலால் தற்போது விவசாயிகளுக்கு வேண்டியது பணமே தவிர, சாகுபடி செய்வதற்கு நிலமல்லவென்பதை எனது அனுபவத்தைக் கொண்டு கூற விரும்புகின்றேன். முக்கியமான பிரச்னை நிலத்தைப் பயிர்த்தனிக்கும் பிரச்னையேயாகும். இந்த திட்டத்தைத் தெளிவாகத் தெரிவிப்பதற்கு கூச்சப்படுவனேன்? அரசாங்கப் பொருளாதார நிலையில் 30 கோடிக்குமேல் பிடிக்கும் இத்தகைய முக்கிய மசோதாவை, அவசரமுடன் சட்ட சபையில் புகுத்தி, சட்டமியற்ற தீர்மானமடையலாகாது.

என்னுடைய மறுப்புரையைப்பற்றி, டா-சோ குறிப்பிடும் பொழுது, நான் இவ்விஷயங்களை விற்பனையாளர் என்ற முறையில் ஆராய்ந்திருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிருர். சாமான்களுக்கு விலை கொடுக்க வேண்டிய விவாதத்தைப்பற்றி நான் குறிப்பிட்டிருக்கின்றேன். இயற்கையிலேயே செட்டியார்கள் வியாபாரிகள் என்பதில் சந்தேகமில்லை. சில வற்புறுத்தலான நிலமைகளை முன்னிட்டு, அவர்கள் கைக்கு வந்திருக்கும் நிலங்களை, எப்பொழுதும் கட்டி வைத்திருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பவில்லை. அத்தகைய நிலங்களுக்குத் தகுதியானதும் நியாயமானதுமான சரியான ஈடு அவர்கள் கேட்பது நியாயமானதும், தகுதியானதுமாகும். அவர்கள் ஏராளமான மூலதனத்தை இந்நிலங்கள் மீது போட்டு வைத்திருக்கிருர்களென்பது ஒத்துக்கொள்ள வேண்டிய விஷயம். இம்மசோதாவின் 9-வது பிரிவில் கூறியுள்ளபடி மார்க்கெட் மதிப்பின்படி, அவர்களது நிலங்களுக்குப் பணம் அளிக்கப் பெறுமானுல், அவர்கள் அந்நிலங்களுக்கு அளித்த பணத்தைக் காட்டிலும், மிகக் குறைவான பணத்தையே பெற நேரிடும் என்பது மிகத் தெளிவாக விளங்குகின்றது. ஆதலால் சில விடங்களில் அச்சங்கொள்வது போன்று, இம்மசோதாவினுல் செட்டியார்கள் நன்மையடைய முடியாது. ஏனெனில் நிலச்சுவான்தார்கள், தங்கள் நிலங்களை நல்ல விலைக்கு விற்பதற்கு மார்க்கமில்லை. விவசாயிகளல்லாத நிலச்சுவான்தார்கள் தங்கள் வசமுள்ள நிலங்களை விட்டு விட்டு ஏற்றவகையில் பணம் பெறுவதற்கு இம்மசோதாவை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிருர்களென்ற கூறப்பெறும் தப்பபிப்பிராயம் நினைப்பதற்கும் ஆச்சரியமாயிருக்கிறது.

இந்த திட்டத்தின் மற்றொரு முக்கிய விஷயத்தை, அரசாங்கம் நன்ருகச் சீர்தூக்கிக் கவனிக்கவேண்டும். நிலவரி செலுத்தவேண்டிய பெரியதோர் பொறுப்பு, சொந்தக்கார முதலாளிகளிடமிருந்து சிறிய விவசாயிகள் வசம் சாரும். இதனுல் பல சிக்கல்கள் பெருகும் என்பதும் வரி வசூலிப்பதற்கு ஏராளமான செலவு நேரிடும் என்பதும் விளக்கமாகத் தெரிகின்றன. தேசத்தின் பொருளாதார வருமானத்திற்கு இதனுல் நஷ்டம் ஏற்படும். ஒருவருக்குச் சொந்தமான சொத்தை, அவரிடமிருந்து பறித்து மற்றொரு பிரிவினருக்கு அளிப்பதென்பது, பிரஜா உரிமைகளில் நியாயமில்லாமல் தலையிடுவதாகும். தகுதியான சரியான நஷ்ட ஈடு அளிக்கப்பெறுமானுல், நியாயம், நேர்மை ஆகியவைகளின் தோற்றம் சிறிது தோன்றலாம். ஆனல் இந்த மசோதா, அந்த வகைகளில் 1894-ம் ஆண்டு நிலம் பெறும் சட்டத்தி (Land Acquisition Act) னின்று விலகிச் செல்கின்றது. இந்த நிலம் பெறும் சட்டம், நியாயமான நஷ்ட ஈட்டை அளிப்பதற்குரிய வழியை காண்பிப்பதுடன், காலத்திற்கு ஏற்றதாயுமிருக்கிறது. பர்மிய நிலச் சொந்தக்காரர்கள் கூட, நிலம் வாங்கும் மசோதாவைப் பூரணமாக எதிர்க்கிருர்கள். இம்மசோதாவை ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற பிரேரணையை நான் எதிர்க்கின்றேன்.

மசோதா சம்பந்தமான விவாதம் ஒத்தி வைக்கப்பெற்றிருக்கிறது.







## ஸர் ஓட்வியர் சுட்டுக் கொல்லப்பட்டார்

### மற்றும் மூவருக்குக் காயம்

மார்ச் 13உ இரவு லண்டன் காக்ஸ்டன் மண்டபத்தில் நடைபெற்ற கிழக்கு இந்திய சங்கக்கூட்டத்தில் மாஜி பஞ்சாப் கவர்னரான ஸர் மைக்கேல் ஓட்வியர் ஒரு இந்தியரால் சுட்டுக் கொல்லப்பட்டார். அந்தக் கூட்டத்திலிருந்த இந்தியா மந்திரியான லார்டு ஸெட்லண்டுக்கும் மாஜி பஞ்சாப் லெப்டினெட் கவர்னரான ஸர் லூயிடேனுக்கும் மாஜி பம்பாய் கவர்னரான லார்டு லாமிங்டனுக்கும் காய மேற்பட்டது.

இது சம்பந்தமாக மகமத் ஸிங் ஆசாத் என்பவன் கைது செய்யப்பட்டிருக்கிறன். அவனுடைய பெயர் உத்தம சிங், என்றும் மோஹன சிங் என்றும் சொல்லப்படுகிறது. கேஸ் விசாரணை மே மாதம் 8உ வரை ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

இந்த அட்டூழியத்தைக் கண்டித்து பத்திரிகைகளும் தலைவர்களும் அபிப்பிராயம் தெரிவித்திருக்கின்றனர். காந்திஜி தமது கண்டனத்தைத் தெரிவிக்கும் போது: "ராஜீய பிரச்னைகளை இது பாதிக்க ஒருவரும் இடம் கொடுக்க மாட்டார்கள் என நம்புகின்றேன்" என்று குறிப்பிட்டார். லார்டு ஜெட்லண்டு வழக்கம்போல் தமது வேலையில் ஈடுபட்டுவிட்டார். மற்ற இருவரும் குணமடைந்து வருகின்றனர்.

### விண்ணில் விநோதம்

பூர், மார்ச், 12உ

இன்று காலை சுமார் 10 மணிக்கு இங்கு கடலிலிருந்து 5 அடி நீளமான நீர் ஊற்று விறுவிறென்று விண்ணை நோக்கிக் கிளம்பி அங்கேயே சுமார் அரை மணி நேரத்துக்கிருந்து அப்பால் மேகத்துடன் கலந்து விட்டது. ஏராளமான ஜனங்கள் இவ்விநோதத்தைக் கண்டு ஆனந்தித்தனர்.

### "தேசபக்தியும் குற்றமே!"

ஸ்ரீ ஜெயப்பிரகாசரின் பத்தினியார் ஸ்ரீமதி பிரபாவதி தேவி பின்வருமாறு கூறினர்: "எனது கணவர் கைதியாகும் சேதிகேட்க நான் எப்போதும் தயாராய்த் தானிருந்தேன். நமது பாரத நாட்டிலே தேசபக்தி என்பது ஒரு பெரிய குற்றம் அல்லவா!"

இப்போதிருக்கும் பிரிட்டிஷ் பார்லிமெண்டு சபை அடுத்த நவம்பரில் கலைக்கப்பட்டு மறு தேர்தல்நடத்தப்படவேண்டும். இப்போது பிரிட்டன் யுத்தத்திலீடுபட்டிருப்பதால் இந்தப் பார்லிமெண்டின் ஆயுளை நீடிப்பதென்று யோசனை இருந்து வருகின்றதாம்.

ஸ்டாலின் —முசோலினி சமரசத்திற்கு ஹிட்லர் தீவிரமாக முயற்சி செய்கிருர்.



## ரஷ்யா-பின்லந்து சமாதான உடன்படிக்கை

### பெருவாரியான பிரதேசங்கள் தானம்

ரஷ்யாவுக்கும்—பின்லந்துக்கும் சமாதான உடன்படிக்கை ஏற்பட்டுவிட்டது. உடன்படிக்கையின் பிரிவு பின்வருமாறு:-

கரிலியன் பூசந்தி முழுவதையும், லகோடா ஏரிக்கரை முழுவதையும் வடபாகத்திலுள்ள (செம்படவர்) தீபகற்பம் கிழக்கு பின்லந்தில் ஒரு பாகம் இவைகளையும், பின்லந்து ரஷ்யாவுக்கு அளிக்க ஒப்புக்கொள்ளுகிறது. ஹாங்கோ துறைமுகத்தையும் ஹாங்கோ ஜில்லாவையும் 30 வருஷகாலத்திற்கு ரஷ்யாவிடம் குத்தகைக்கு ஒப்புவிக்க பின்லந்து இணங்குகிறது. ரஷ்யா குத்தகைப் பணமாக வருஷமொன்றுக்கு 80 லட்சம் பின்னிஷ் மார்க் பின்லந்துக்குச் செலுத்தும். அந்தத் துறைமுகத்தை ரஷ்யா தனது கடற்படைத் தளமாக உபயோகித்துக் கொள்ளும். வட அட்லாண்டிக் கடலில் பின்னிஷ் கரையைப் பாதுகாப்பதற்கான சிறு கப்பல்களைத் தவிர யுத்தக் கப்பல்களோ, சப்மரீன்களோ, யுத்த விமானங்களோ வைத்துக் கொள்வதில்லையென பின்லந்து உறுதி கூறுகிறது. பெட்ஸாமோ வழியாக சுங்கக் கட்டுப்பாடுகளுக்குக் கட்டுப்படாமல் நார்வேயுடன் போக்குவரத்து நடத்த ரஷ்யாவுக்கு உரிமையுண்டு. இவ்வருடத்தில் காண்டலாக்ஸ் என்ற ரஷ்யக் கடற்படைத் தளத்திலிருந்து பின்லந்தின் மத்திய பாகத்துக்கு வடக்கேயுள்ள கேமிஜார்விக்கு ஒரு ரயில் பாதை அமைக்கப்படும்.

இருதரப்பினரும் ஒருவர்மீது ஒருவர் ஆக்ரமிப்பு நடவடிக்கை எடுத்துக் கொள்வதில்லை யென்றும் தங்களில் எவருக்கும் விரோதமான முறையில் பிற நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதில்லை யென்றும் உறுதி கூறியிருக்கின்றனர்.

"சமாதானத்திற் கிணங்கியதேன்?"

சமாதான நிபந்தனைகளால் பெரும் நஷ்டம் ஏற்படுமெனத் தெரிந்தும், மக்களைப் பெரும் துன்பத்திலிருந்து மீட்பதற்காகவே நிபந்தனைகளைத் தயக்கத்துடன் ஏற்றுக்கொண்டதாக பின்னிஷ் சர்க்கார் அறிக்கை கூறுகிறது. பின்னிஷ் பார்லிமெண்டு இந்த உடன்படிக்கையை உறுதிப்படுத்திற்று. சோவியத் ரஷ்யாவுடன் நடத்திய யுத்தத்தில் பின்லந்துக்கு 7½ கோடி பவுன் செலவாகியிருப்பதாக மதிப்பிடப்படுகிறது.

### மேயர்மீது கவுன்சிலர் தாவா

சென்னை மேயர் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி தம் உத்தியோக மோட்டாரில் ஆத்தூரில் நடைபெற்ற காங்கிரஸ் மகாநாட்டுக்குப் போனரென்று கூறி அதைப்பற்றி விவாதிக்க ஒரு விசேஷக் கூட்டத்தைக் கூட்டுமாறு ஸ்ரீ எஸ் தாமோதரம் நாயுடுவும் வேறு மெம்பர்களும் நோட்டீஸ் கொடுத்ததாகவும், மேயர் அது செல்லாதென்று கூறி நிராகரித்துவிட்டதாகவும், விசேஷக் கூட்டம் கூடுமாறு கோர்ட் உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று சிடி சிவில் கோர்ட்டில் ஸ்ரீ தாமோதரம் நாயுடு செய்துகொண்ட மனு 26உ விசாரணைக்கு வாய்தா போடப்பட்டிருக்கிறது.

### பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குத் தடையா?

சென்னைக் கார்ப்பொரேஷன் கூட்டங்களுக்குப் பத்திரிகைக்காரர்களை அனுமதிக்கக்கூடாதென்று ஸ்ரீ ஜி. செல்வபதி செட்டியாரும் மற்றும் சிலரும் ஒரு தீர்மானத்திற்கு நோட்டீஸ் கொடுத்திருந்த விஷயம் ஏற்கனவே 'குமர'னில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. இத்தீர்மானத்தை மேயர் நிராகரித்துவிட்டார்.

## ராமநாதபுரம் போர்டு 1940-41ம் வருட பட்ஜட்

### கல்லலில் போர்டுச் சந்தை

1939-40 க்குரிய திருத்தப்பட்ட பட்ஜட்டும், 1940-க்குரிய பொதுநிதி, ஆரம்பக் கல்விக்குரிய பட்ஜட் திட்டங்களும் பட்ஜட் கமிட்டி, அங்கீகரித்தபடி மார்ச் 11உ மதுரையிலுள்ள ராமனுதபுரம் ஜில்லாபோர்டு ஆபீஸில், தலைவர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா எம். எல். ஏ. தலைமையில் நடைபெற்ற போர்டுக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்டன.

1940-41 ம் வருஷம் 11,060 ரூ. இருப்புடன் ஆரம்பமாகிறது. எதிர்பார்க்கும் வரவு ரூபாய் 9,34,100; ஷை செலவு ரூபாய் 9,11,160. மிச்சம் ரூ 34,000.

சிவகெங்கை போர்டு ஹைஸ் கூலில் 5-வது பாரம் வைக்கவும், திருப்பத்தூர் நாகப்பா—மருதப்பா போர்டு மிடில் ஸ்கூலில் 4-வது பாரம் வைக்கவும் திட்டமிடப்பட்டிருக்கிறது. ரோடுகள் பராமரிப்புக்காக ரூ 3,34,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வருஷம் ஆரம்பக் கல்வி இனத்துக்கு ரூ 4,33,860 செலவேற்படுமென மதிப்பிடப்படுகிறது. பள்ளிக்கூடங்களில் நூல்நூற்றல் கற்பிக்க அவசியப்படும் உபகரணங்கள் வாங்க ரூபாய் 500 ஒதுக்கப்பட்டது ரூபா 1000 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆரம்பக் கல்விநிதியை அபிவிருத்தி செய்யும் நோக்கத்துடன் நிலவரியில் ரூபாய்க்கு 3½ பைசாவிலிருந்து 4½ பைசாவாக கல்வி வரியை உயர்த்தத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இது 1350 பசலி முதல் அமுலுக்கு வரும்.

### போர்டுக் கூட்டம்

குடியிருப்பு வீடுகளின் முன்பு ரோடருகிலிருக்கும் 3X5 அடி அளவுள்ள சாக்கடை மூடிகளும், கேட்டுகளின் முன்பு 3X10 அடி அளவுள்ள சாக்கடை மூடிகளும் ஆக்கிரமிப்பு வரியிலிருந்து விலக்கப்படவேண்டுமென்று ஸ்ரீ வ. சொ. ராம. வள்ளியப்ப செட்டியார் M.L.A, மார்ச் 11உ நடைபெற்ற ராமனுதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டத்தில் கொண்டு வந்த தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. போர்டுத் தலைவர் ஸ்ரீ குமாரசாமி ராஜா தலைமைவகித்தார்.

கல்லல் கிராமத்தில் ஒவ்வொரு வியாழக்கிழமையும் போர்டு ஒரு சந்தையை நடத்த வேண்டுமென்று ஸ்ரீ R. V. சாமிநாதன் (உபதலைவர்) கொண்டு வந்த தீர்மானமும் ஏகமனதாக நிறைவேறியது.

மதுரை—ராமனுதபுரம் ஜில்லா கைத்தொழில் சங்கத்துக்கு ரூ 200 நன்கொடையளிக்கத் தீர்மானிக்கப்பட்டது. சிவகங்கையிலிருக்கும் போர்டு விவசாயக் கைத் தொழில் பள்ளிக்கூடத்தின் உபயோகத்துக்காக 36¾ ஏக்கர் நிலத்தை ஆர்ஜிதம் செய்வதென்ற போர்டு எஞ்சினீயரின் யோசனையை ஏற்றுக்கொண்டு, ஷை பள்ளிக்கூடத்தை மேல் நடத்துவது பற்றி யோசிக்க தலைவருடன், ஸ்ரீமான்கள் வள்ளியப்பா எம். எல். ஏ., ராமசாமி நாயுடு, சுவாமிநாதன், முருகராஜ ஐயங்கார், கிருஷ்ணசாமி ஐயங்கார், கருமுத்து சிவலிங்கம் ஆகியோரடங்கிய தனிக் கமிட்டி அமைக்கப்பட்டது.

இனிமேல் வகுப்பு முறையில் பள்ளிக்கூடங்கள் திறக்கக் கூடாதென்றும், இப்பொழுதிருக்கும் பள்ளிக்கூடங்களை எவ்வித சாதி மத வித்தியாசமுமின்றித் திருத்தியமைக்க வேண்டுமென்றும் ஸ்ரீமதி கமலா சிவசுப்பிரமணியம் கொண்டுவந்த தீர்மானம் கைவிடப்பட்டது. கிராமப் பக்கங்களிலுள்ள சகல போர்டு ஸ்கூல்களிலும் தமிழ்க் கணக்கு முறைகளையும் ஏடெழுதும் முறைகளையும் கற்பிக்க வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட தீர்மானம் கல்விக் கமிட்டியின் பரிசீலனைக்கு அனுப்பப்பட்டது. (நமது நிருபர்)

## புகையிலை வரிக்குத் திருத்தங்கள்

### சென்னை சர்க்கார் அறிக்கை

புகையிலை வரிக்கு சென்னை சர்க்கார் பின்கண்ட திருத்தங்களைச் செய்ய உத்தேசித்திருக்கிருர்கள்:

(1) வருஷத்திற்கு ரூ 400-க்கும் அதற்குக் குறைவாகவும் விற்பனையுள்ளவர்கள் அரை வருஷ வரியை முன்னதாகவே கட்டி விடவேண்டும். (2) தங்களுடைய உற்பத்திக்கு உபயோகித்துக் கொள்ள புகையிலை வாங்குவதற்கு, உற்பத்திக்காரர்கள் தனி லைசென்ஸ் வாங்கும் நிர்ப்பந்தம் ரத்தாகவேண்டும். (3) புரோக்கர்களின் லைசென்ஸ் கட்டணம் ரூ 10 ஆகக் குறைக்கப்பட வேண்டும். இந்தத் திருத்தங்கள் கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. ஆட்சேபனை யிருப்பவர்கள் மார்ச் 25உக்குள் சர்க்காருக்கு எழுதவேண்டும்.

### கலித்தொகை மகாநாடு

சென்னையில் இம் மாநாடு மார்ச்சு 9, 10-ம் நாட்களிற் கூடிற்று. சைவ சித்தாந்த கழகத்தைச் சேர்ந்த தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் இம் மாநாட்டைக் கூட்டினர்.

ஆசிரியர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் இந்த இரண்டு நாட்களும் அவைத் தலைவரா யிருந்தார். முதல் நாள் தலைவர் முகவுரைக்குப் பின் சென்னை லயோலா கல்லூரி விரிவுரையாளரான வித்வான் E. K. நடேச சர்மா 'முல்லைக் கலி' என்பது பற்றியும், சென்னைப் பச்சையப்பன் கல்லூரி விரிவுரையாளரான வித்வான் மு. வரதராஜனர், B. O. L. 'மருதக் கலி' என்பதுபற்றியும் பேசினர். மறுநாள் 10-3-40 மாலை 4-மணிக்கு மாநாடு கூடிற்று.

சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சி மாணவியரான திரு. K. ஞானம்பாள் அம்மையார் M. A., திரு. இளவழகனர், முத்தையாலுப்பேட்டை உயர் நிலைப்பள்ளி தமிழாசிரியரான வித்வான் மா. இராசமாணிக்கம் பிள்ளை, B. O. L. ஆகியோர் முறையே 'பாலைக் கலி', 'நெய்தற் கலி', 'குறிஞ்சிக் கலி' களைப்பற்றிப் பேசினர்.

சில தினங்களுக்கு முன்னே முதல் முதலாகச் சென்னையில் கூடிய 'பத்துப்பாட்டு மாநாடு' இப்போது கூடிய 'கலித்தொகை மாநாடு, இவைகளைப்போன்று சங்க நூல்கள் பலவற்றுக்கும் பல மாநாடுகளை அடிக்கடி கூட்டித் தமிழகத்துக்கு மாட்சிமை தேடவேண்டுமென்றும், இத்தகைய கூட்டங்களை சென்னையில் நடத்த 'சங்க நூல் மண்டபம்' என்னும் ஒரு விரிவுரை மண்டபம் தோற்றுவிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. சங்கச் செயலாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும், அவரவருதவி குறித்து மகிழ்வுடன் நன்றி கூற மாநாடு நன்கு நிறைவெய்தியது.

### கிராமணி மனு நிராகரிக்கப்பட்டது

சென்னை மைலாப்பூரில் அறுபத்து மூவர் திருவிழா வன்று நாகம்மாள் என்ற பெயருடைய வேலைக்காரியைக் கொன்ற குற்றத்தில் ஹைகோர்ட் செஷன்ஸில் தூக்குத்தண்டனைவிதிக்கப்பட்ட ஷண்முக சுந்தர கிராமணியின் சார்பில் தாக்கல் செய்யப்பட்ட கருணை மனுவை சென்னை சர்க்கார் நிராகரித்து விட்டார்கள்.

குமரன்

காரைக்குடி
பிரமாதி-ஞூ பங்குனி-மீ 8-உ

## தமிழ் நாட்டில் கதர்

மகாத்மாவின் திட்டத்தில் தலைசிறந்து நிற்பது கதரியக்கமாகும். அதன் வளர்ச்சி சுமாராகவே இருக்கிறது. காங்கிரஸ் அங்கத்தினர்களில் பலரும் காந்தியடிகளின் சிஷ்யர்களாக இருப்போரிற் பலருமே இந்தக் கதர்த் திட்டத்தை நம்புகிறதில்லையென்பதற்கு வேறு சான்று வேண்டியதில்லை. கதருற்பத்தியும் விற்பனையுமே சான்று பகர்கின்றன. கதர் ஒன்றே தேச விடுதலையைத் தரக்கூடியதென்று இன்றைய நெருக்கடியிலும் மகாத்மா கூறுகிறார். அவருடைய தாக்ஷண்யத்திற்கும் மரியாதை இழந்துவிடாமல் காப்பாற்றிக் கொள்ளவுமே கதரை ஆதரிப்போர் பலராகிவிட்டனர். காந்தியடிகள் இதனைப்பற்றிக் கொண்டிருக்கிற நம்பிக்கைக்கும் அவருடைய சொல்லுக்கும் நம்பிக்கை நல்குவதாயின் கதர் எங்கும் பரவி வெகுதூரம் முன்னேறி யிருத்தல் கூடும்.

கதர் அபிவிருத்தியைப்பற்றி நோக்கலாம். தமிழ் நாட்டிலுள்ள அகில இந்திய சர்க்கா சங்கத்தின் அறிக்கை நமது பார்வைக்குக் கிடைத்திருக்கிறது. அதிலிருந்து கதர் இன்னும் செவிலித்தாயின் கையில் கிடக்கும் சிறு குழவியாக இருக்கிறதென்பது தெற்றென விளங்குகிறது. ஆள் வலுவில்தான் கதர் உண்டாவதும் வெளியேறுவதும் இருக்கிறதென்று கூறவேண்டியிருக்கிறது. முடிந்த வருஷத்தில் விற்பனையாகாமல் கதர் தேங்கிவிட்டதென்று அந்த ஸ்தாபனம் நின்று தவிக்கவேண்டியதாகிவிட்டது. நாகரிகமாக கூப்பன் மூலமாகவும் விற்பனை செய்யப்பட்டதென்பதும் கவனிக்கத்தக்கது. அறிக்கையில் காணும் சில குறிப்புகளை இங்கே கவனிக்கலாம். இந்த ஆண்டில் 6,16,714 ரூபாய்க்கு நூல் நூற்கப்பட்டிருக்கிறது. இதனை 55,624 பேர் நூற்றிருக்கின்றனர். இந்த ஐம்பத்தையாயிரம் பேர்தான் தமிழ் நாட்டில் நூல் நூற்றவர்கள், இவர்களும் பூரணமாக நூற்கவில்லை. இந்த நூலைக் கொண்டு நெய்யப்பட்ட துணிகளை விற்பனைசெய்ய மாபெரும் முயற்சி தேவைப்பட்டிருக்கிறது. நூற்றவர்கட்குக் கூலியும் போதியதாக இல்லை. எட்டு மணிநேரம் நூற்ருல் மூன்றணு கூலி கிடைக்கக் கூடுமென்று தெரிகிறது. இதை யொட்டிப் பார்க்கிறபோது விவசாயமில்லாத நாளில் கிராமாந்தரங்களிலிருக்கிற ஜனங்கள் சாதாரணமாக நூற்றுக் கொண்டிருந்தால் ஏதோ மாதம் நாலு, ரெண்டு கிடைக்கத்தான் செய்யும். அதுவே ஒன்றுமில்லாத ஜனங்கட்கு உபயோகமாக இருக்குமன்ருே? இதில் இவ்வாண்டு ஏற்பட்டிருக்கிற அபிவிருத்தியொன்று குறிப்பிடத் தக்கதாகும். பஞ்சு அறைத்துச் சேப்பனிட்ட வேலைகள் யாவும் நாட்டு மணியிலேயே செய்யப்பட்டதாக அறிக்கை கூறுகிறது. இது நூற்பதற்கு அடிப்படையான பலத்தை நல்குவதாக இருக்கிறது.

இனி நெசவு வகையை நோக்கும்போது, கை நெசவாளிகள் அநேகமாக ஒழிக்கப்பட்டு வருகிறார்கள். மில் நெசவு தோன்றியதிலிருந்து கை நெசவுத் தொழில் பட்டு வருகிறது. கதருற்பத்தியால் கை நெசவு தழைக்குமென்பதில் ஐயமில்லை. கதர் நெசவு செய்பவர் தொகை 2093 எனத் தெரிகிறது. இவர்கள் வாரமொன்றுக்கு 6-2-3 கூலி பெற்றிருப்பதாக அறிக்கை கூறுகிறது. இது நல்ல கட்டுபடியான கூலி யென்றே கூறவேண்டும்.

இவ்வாண்டு கதர் ரூ 11,84 987க்கு உற்பத்தியாகி யிருக்கிறது. சேலை மட்டும் 4000 விற்பனையாகி யிருக்கிறது. மொத்தத்தில் இந்த வருஷ விற்பனை ரூ 14,56,730. இதில் வெளி மாகாணங்கட்கு அனுப்பப்பட்டதும் சேர்ந்திருக்கிறது. இந்த சங்கத்திற்கு உபயோகமாக இருக்கிற மூலதனம் எட்டு லட்சத்துச் சொச்சம் ரூபாய். இதனைக்கொண்டு பன்னிரண்டு லட்சம் ரூபாய்க்கு சரக்கு தயாராகியிருக்கிறது. சுமார் 40,000 ரூபாய் லாபம் தெரிகிறது. அரசாங்கக் கிராண்டும் உண்டு. இந்தக் கதர்க் குழந்தைப் பிள்ளை தானுகத் தமிழ் நாட்டில் ஓடியாடி உயர்வுபெற்றுத் தனக்குத் தானே வாழுமாறு வழி செய்ய வேண்டுவது தமிழ் மக்கள் கடனுகும்.

---

## ஜெர்மனியின் தீவிரப் படையெடுப்பு?

### ஹிட்லர் முசோலினி சந்திப்பு

13உ யன்று ஜெர்மன் ரேடியோவில் உத்தியோக முறையில் பின் வருமாறு அறிவிக்கப்பட்டது: "இங்கிலாந்தின் மீது மேலும் ஆகாயப் படையெடுப்பு நடத்த ஏற்பாடாகி வருகிறது. இனிமேல் இங்கிலாந்து மீது தீவிரமாக யுத்தம் நடத்த ஜெர்மனி தீர்மானித்திருக்கிறது"

பின்னிஷ்—சோவியத் ஒப்பந்தமானது நேச தேசக் கட்சிக்கு ஒரு தோல்வியாகுமென ஜெர்மன் பத்திரிகைகள் வெளியிடும் கருத்தை லண்டனில் விஷயம் தெரிந்தவர்கள் அங்கீகரிக்கவில்லை.

### ஹிட்லர் முசோலினி சந்திப்பு

வான் ரிப்பன்டிராப் சமீபத்தில் ரோமுக்குச் சென்றிருந்த பொழுது முசோலினியும் ஹிட்லரும் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்யப்பட்டது. அதன்படி இரு சர்வாதிகாரிகளும் திங்கட்கிழமை பின்னெர் என்ற விடத்தில் சந்தித்துப்பேசினர்.

### ஹிட்லரின் சமாதான நிபந்தனைகள்

ஹிட்லரின் சார்பாக 11 சமாதான நிபந்தனைகளை வான்ரிப்பன் டிராப் பாப்பாண்டவரிடம் சமர்ப்பித்திருப்பதாகத் தெரிகிறது. அந்த நிபந்தனைகள் காலனிகளைத் திருப்பித் தரவேண்டுமென்ற பழைய பல்லவியிலேயே அமைந்திருக்கிறது.

---

## காரைக்குடி நகரசபைக் கூட்டங்கள்

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று நேற்று மாலை 4-45 மணிக்கு நகர சபை ஹாலில் சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் தலைமையில் கூடியது. 4 மணிக்கு போடப் பெற்றிருந்தக் கூட்டம் கோரம் சேராதபடியால் 4-45 மணிக்குத்தான் நடத்த முடிந்தது. ஆரம்பத்தில் ஏழு அங்கத்தினர்களும் 5 மணிக்கு கவுன்சிலர் ஸ்ரீ தி. ம. நடராஜனும் ஆக எட்டு அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:

கல்லுக்கட்டி ஊருணி குட்டில் இண்டர் லொக்யூட்டரி தடை உத்தரவு மனு பைசலாகாத நிலையில் டி ஊருணியில் மீன்பிடிக்கும் பாத்தியதையை குத்தகைக்கு விடாமல் இருப்பது நலம் என்று அபிப்பிராயம் கூறியுள்ள தேவகோட்டை அட்வகேட் ஸ்ரீ எ. ரங்கசாமி ஐயங்கார் கடிதம் ரிக்கார்டு செய்யப்பெற்று குத்தகை தள்ளிவைக்கப்பட்டது.

மொத்த வருமானத்தில் 15 சத விகிதப்படி திங்கட்கிழமை சந்தைக்குத் தற்போது விதிக்கப்பெறும் லைசென்ஸ் கட்டணம் மிகவும் அதிகமாக இருக்கிறதென்றும், அதை 5 சத விகிதமாகக் குறைக்கவேண்டுமென்றும் கோரியுள்ள ஸ்ரீ கொப்புடைய நாயகி அம்மன் கோவில் டிரஸ்டி ஸ்ரீ ராம. அ. அண்ணாமலை செட்டியாரின் மனு யோசிக்கப்பெற்று இப்பொழுது விதித்திருக்கும் விகிதம் சரியானதென்றும் இதினின்று குறைக்க முடியாதென்றும் பாக்கியை வசூலித்துக்கொண்டு 1940—41 வருஷத்துக்கு லைசென்ஸ் கொடுப்பதெனவும் முடிவு செய்யப்பெற்றது.

இமிடேஷன் மார்பிள் கல்லில் உருவச் சிலைக்கு ரூ 500ம், அதனுடைய பீடத்திற்கு ரூ 200ம் நன்கொடை கொடுப்பதாக ஸ்ரீ சித. ராய. சிதம்பரம் செட்டியார் ஒப்புக் கொண்டிருக்கிறார். நன்கொடை வந்தனத்துடன் ஒப்புக் கொள்ளப்பட்டது.

ஆபீஸ் புதுக்கட்டிடத்திற்குப் போகும்போது கமிஷனருடைய ஜாகைக்கு டெலிபோன் கனெக்ஷன் செய்துகொள்ள அனுமதிக்கப்பட்டது.

புதிய முனிசிபல் ஆபீஸ் கட்டிடத்தில் மகாத்மா காந்தியின் ஆயில் பெயிண்டிங் படம் ஒன்று அமைப்பதற்காக கவுன்சிலர் ஸ்ரீ முரு. அருணசலம் செட்டியார் ரூ 300 நன்கொடை அளித்திருக்கிறார். நன்கொடை வந்தனத்துடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

எட்டு அங்கத்தினர்களுடன் ஸ்பெஷல் கூட்டம் ஒன்று 5-30மணிக்குக் கூடியது 1940-41 வருடத்திற்கு அபராதம் அன்னியில் லைசென்ஸ் பீஸ் செலுத்துவதற்கான காலத்தை 30-3-40 முடிய நீடிக்கச் செய்யலாமென்ற தீர்மானம் நிறைவேறியது.

### கமிஷனர் மாற்றம்

காரைக்குடி முனிசிபல் கமிஷனர் திரு. டி. புருஷோத்தம் திடீரென மாற்றப்பட்டிருக்கும் விஷயம் யோசிக்கப்பட்டது.

முனிசிபல் ஆபீஸ் கட்டிடம் முதலிய தொடங்கப்பட்ட முக்கிய வேலைகள்முடிவு பெறும்வரை—அதாவது 6 மாதம் வரை கமிஷனர் திரு. டி. புருஷோத்தம் அவர்களை இவ்வூர் முனிசிபாலிட்டியில் இருக்க அனுமதிக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

---

## காங்கிரஸ் தீர்மானம் நிறைவேறியது

### விஷயாலோசனைக் கமிட்டியில் மகாத்மா பேசினர்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

வித்தியாசங்களெல்லாம் மறைந் தொழிந்துவிடும். ஆனல் பிரிட்டன் இருந்து அதிகாரம் வகிக்கும்வரையில் மேற்படி வித்தியாசங்கள் தொடர்ந்து இருந்தே வரும்" என்று குறிப்பிட்டார்.

பாபுஜிக்குப் பின்னர் பண்டிதர் பேசினர். அவர் பேசியதன் ஒரு பகுதி வருமாறு:—

"அரசியல் நிர்ணய சபையை கூட்டுவதற்கு வகுப்புப் பிரச்னை முட்டுக்கட்டையாக இருக்கிறதென்று கூறப்படுகிறது. இவ்விஷயத்தில் என்னுடைய திட்டமான அபிப்பிராயம் என்னவெனில் மூன்றுவது ஆசாமிகள்- அதாவது பிரிட்டிஷார் இந்த தேசத்திலிருக்கு மளவும் வகுப்புப் பிரச்னையைத் தீர்க்கவே முடியாது. பிரிட்டன் தன்னுடைய ஏகாதிபத்திய நன்மைக்கு பலம் தேடுவதற்காகவே யுத்தம் நடத்துகிறது. ஆகவே இந்த யுத்தத்தில் இந்தியா பங்கெடுத்துக்கொள்ள முடியாது. இந்த நிலையில் இந்தியாவில் போராட்டம் ஏற்படுவது நிச்சயம். இப்போராட்டம் எத்தகையதாக இருந்தபோதிலும் அது கண்டிப்பாக பெருந்த முறையிலேயே நடக்கும். இத்தகைய போராட்டத்தை இந்தியா இதற்கு முன் பார்த்தேயிராது. போராட்ட மென்றால் அது வெறும் கொடிகளை ஆட்டுவதும் தேசீயக கீதங்களை பாடுவதுமாகவிராது. இதற்குமுன்னர் நாம் செய்த தியாகங்களைக் காட்டிலும் பன்மடங்கு அதிக தியாகங்கள் புரிய நாம் தயாராயிருத்தல் வேண்டும். எப்பொழுது போராட்ட மென்பதை முடிவு செய்யவேண்டியவர்கள் எனையோர்"

### காரியக் கமிட்டிக் கூட்டம்(மார்ச், 18உ)

காரியக்கமிட்டிக் கூட்டம் இன்றுகாலை கூடியது. அபேதவாதக் கட்சித்தலைவர்கள் ஒன்றுகூடி பாட்ன தீர்மானத்தைத் திருத்த ஒரு பிரேரபணையும் கொண்டுவருவதில்லை யென்ற முடிவுக்கு வந்திருக்கின்றனர். அபேதவாதிகளின் ஒத்துழைப்பு விசேஷமானதாகக் கருதப்படுகிறது.

### விஷயாலோசனைக் கமிட்டி

காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டி தற்போதைய அரசியல் நெருக்கடியைப் பற்றி பாபு ராஜேந்திரர் பிரேரபித்த தீர்மானத்தை அங்கீகரித்தது. தீர்மானம் நிறைவேறியதற்குப் பின் மகாத்மா முக்கியமான தொரு பிரசங்கம் செய்தார். அதன் சாரம் வருமாறு:—

"நீங்களாக என்னை உங்கள் தளகர்த்தராகத் தெரிந்தெடுத்துக் கொண்டீர்கள். குறுக்கே ஒரு வார்த்தையும் சொல்லாமல் நான் சொன்னபடி நீங்கள் கேட்காவிட்டால் நான் வெற்றியடைய முடியாது. நான் குறிப்பிடும் நிபந்தனைகளை நீங்கள் பூர்த்தி செய்ய வேண்டும். இல்லையானல் நான் போராட்டத்தை ஆரம்பிக்க முடியாது. என் நிபந்தனைகள் உங்களுக்குப் பிடிக்கா விட்டால் வேறு ஒரு தளகர்த்தரை நீங்கள் தாராளமாக நியமித்துக் கொள்ளலாம். போராட்டத்தை துவக்க விரும்பும் எவரையும் நான் தடுக்கவில்லை. ஆனல் காங்கிரஸ் சார்பாகப் போராட்டத்தைத் துவக்கவேண்டுமானல் அதன் தலைவர் குறிப்பிடும் கட்டுக்கடங்கி நடக்க யாவரும் சித்தமாகவிருக்கவேண்டும். இவ்விதம் நடக்க இஷ்டப்படாதவர்கள் காங்கிரஸை விட்டுப்போய் அதற்கு எதிராகக் கிளர்ச்சி செய்து போராட்டத்தை ஆரம்பிக்கலாம். நான் உங்களுக்குத் தலைவராக விருந்து காரியங்களை கவனிக்க வேண்டுமானல் நீங்கள் என்னிடம் நம்பிக்கைக் கொண்டு நான் காட்டும் வழியில்நடக்க வேண்டும். நீங்கள் எனக்கு மனப் பூர்வமாக ஆதரவு அளித்தால் ஒரு மாதத்திற்குள் நாம் கோரிய பலன் கிட்டிவிடும்."

முடிவில் போராட்டத்தை ஆரம்பிக்கும் பொறுப்பை ராம்கார் காங்கிஜியிடமே விட்டுவிடும். அவரது கட்டளை எப்போது எவ்விதம் பிறக்குமோ?

---

## கம்பர் விழா

சென்ற வாரம் வெளியிட்டு இருக்கிறபடி 1940 ஞூ மார்ச்சு மீ 21-22-23உ களில் (இன்றுமுதல் மூன்று நாட்களும்) காரைக்குடி சிவன்கோவில் தென்கரை ஐஸ்கூல் ஹாஸ்டலில் அமைக்கப் பெற்றிருக்கும் அலங்காரக் கொட்டகையில் நடைபெறும். 22-3-40 மாலையில் அமராவதிபுதூர் மகளிர் இல்லத்துப் பெண் குழந்தைகளின் கம்ப ராமாயணக் கும்மி கோலாட்டங்களும் நடைபெறும். கம்பன் விழா நிகழ்ச்சிகளை ஒலிப்பதிவு செய்து 23-3-40-ல் மாலை 2-30—3 மணி வரையில் திருச்சியிலிருந்து ஒலி பரப்பப்படும். 24-3-40 அன்று நாட்டரசன் கோட்டை கம்பர் கோவிலில் விழா நடைபெறும்.

---

### இளையாத்தக்குடி தேவஸ்தானம்

#### ஹிந்து மத பரிபாலன சட்டத்திலிருந்து விலக்கம் செய்ய வேண்டுகோள்

இளையாத்தக்குடி தேவஸ்தானத்தின் டிரஸ்டிகள் போர்டின் கூட்டம் மார்ச் 16உ தேவஸ்தானம் ஆபீசில் ஸ்ரீ எஸ். வி. எம். வி. டி. வி. என். ராமசாமி செட்டியார் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் இந்த தேவஸ்தானத்தை ஹிந்து மத பரிபாலன சட்டத்திலிருந்து விதி விலக்குச் செய்ய வேண்டுமென்று சென்னைசர்க்காரைக் கேட்டுக்கொள்வதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தேவஸ்தான டிரஸ்டி ஸ்ரீ டி. பி. எல். எஸ். சுப்பிரமணியன் செட்டியாரின் மரணம் குறித்து அனுதாபத் தீர்மானமொன்றும் நிறைவேற்றப்பட்டது.

---



# 'ஏகாதிபத்திய உணர்ச்சி ஒழிந்துவிட்டதா?'

## 'பிரித்தாளும் முறை நின்றபாடில்லை'

### முஸ்லிம்கள் சிறுபான்மை யினரா?

#### பிரசாத்—ஆஸாத் பிரசங்கம்

["நாம் வெற்றி அடைய வேண்டுமாயின் நம்முள் ஒற்றுமைவேண்டும்; கட்டுப்பாடு வேண்டும்; மகாத்மா காந்தியின் தலைமையில் பரிபூர்ண நம்பிக்கைவேண்டும். நமது இயக்கம் முன்னர் பெருமையுற்றதற்கு மகாத்மாவின் தலைமையே காரணம்; அவருடைய தலைமையிலேயே நாம் மேற்கொண்டும் அதிகப் பெருமையை அடையலாம்."]

ராம்கார் காங்கிரசின் வரவேற்புக் தலைவர் ராஜேந்திர பிரசாத் தமது வரவேற்புப் பிரசங்கத்தில், பீஹாரின் சரித்திரத்தையும் சிறப்பையும் விவரித்து பௌத்த மதமும் ஜைன மதமும் இந்நாட்டிற்குச் செய்த பேருதவியைப் பாராட்டினர். வாள் வலிமையைவிட அன்பினல் ஏற்படும் பிணைப்புதான் என்றும் இருக்கும் என்பதை அவர் சுட்டிக் காட்டி, அன்று புத்தரும் இன்று மஹாத்மாஜியும் இவ்வுயர்ந்த தத்துவத்தை உபதேசிப்பதாக அவர் கூறினர். ஒற்றுமையாக வேலை செய்தால் எதுவும் சாத்தியம் என்றும் இந்தியாவில் ஜனநாயகம் தகுதியில்லை என்று கூறுவது எல்லாம் விந்தை என்றும், இக்கூற்று ஆதாரமற்றது என்பதை நிரூபிக்க சரித்திர பூர்வமான ஆதாரம் இங்கு இருப்பதாகவும் அவர் சொன்னர்.

பிறகு பின் வருமாறு கூறினர்:—

"இது மிகவும் நெருக்கடியான காலம். ஒரு தேசத்தில் இத்தகைய நிலைமை ஏற்படுவது அபூர்வம். நாம் சரியான பாதையை யனுசரித்தால் நம் எதிர்காலம் சோபிக்கும். இல்லையேல் நமக்குக் கெடுதிதான். காங்கிரஸ் தேசிய ஸ்தாபனம், நம் நாட்டின் சுதந்திரத்திற்காக அது பாடு படுகிறது. இந்த விஷயத்தில் நம்மில் ஒவ்வொருவரும் அவரவர் பொறுப்பை உணர்ந்து நடக்க வேண்டும். அலக்ஷியமோ சோம்பேறித்தனமோ தகாது. அவசரப்பட்டு அதைக் கெடுக்கவும் கூடாது. ஒவ்வொருவரும் தியாகத்திற்கும் சேவைக்கும் மட்டும் இன்றி எதிர்கால திட்டம் தயாரிப்பதற்கும் முன் வர வேண்டும். நாம் ஒரு முடிவுக்கு வந்தவுடன் அதை நிறைவேற்ற திடமாக இருக்க வேண்டும்."

அகில இந்தியக் காங்கிரசின் 53-வது விழாவில் தலைவர் ஆஸாத் செய்த பிரசங்கம்:

யுத்த ஆரம்பம், காரியக் கமிட்டியின் தீர்மானம், வைஸ்ராய் அறிக்கை, மகாத்மா வைஸ்ராய் சந்திப்பு, பிரிட்டனின் யுத்த நோக்கம், ஏகாதிபத்திய உணர்ச்சி முதலிய சென்ற நிகழ்ச்சிகளை தலைவர் விளக்கிக் கூறினர். பிறகு தன் நிலைமையைப்பற்றி தீர்மானித்து முடிவு செய்துகொள்ள இந்தியாவுக்கு உரிமை இருக்கிறதா இல்லையா என்பதே நேரடியான பிரச்னை யென்றும், பழைய யுத்தத்தில் போன்று இந்த யுத்தத்திலும் ஏகாதிபத்தியத்தின் நோக்கம் நன்ருகத் தெரிகிறதென்றும் ஆகவே இந்த யுத்தத்தில் இந்தியர்கள் கலந்துகொள்ள முடியாதென்றும் கூறினர். பிறகு பேசியதாவது:—

"இருள் சூழ்ந்துள்ள இந்தக்காலத்திலும் மனிதர்களுடைய நல்ல குணத்தில் மகாத்மாகாந்திக்கு நம்பிக்கை யிருக்கிறது. அந்த நம்பிக்கை தான் உன்னதமான அவரது ஆத்மாவின் ஜீவாதாரம், யாரும் தகர்க்க முடியாத நமது நிலைமையை பலஹீனப்படுத்திக் கொள்ளுகிறோமே என்ற எண்ணம் சிறிதுமின்றி அவர் சமரசத்துக்கான எல்லா மார்க்கங்களையும் கடைப்பிடிக்க எப்பொழுதும் தயாராயிருக்கிறார்.

"யுத்தம் ஆரம்பித்த நாளாய் பிரிட்டிஷ் மந்திரிகள் பலர், பழைய பிரிட்டிஷ் ஏகாதிபத்திய முறை ஒழிந்துவிட்டதென்றும் அமைதியையும் நியாயத்தையும் நிலைபெறச் செய்வதைத் தவிர பிரிட்டிஷாருக்கு வேறு எந்த நோக்கமுமில்லை யென்றும் உலகத்தை நம்பச் செய்ய பிரயத்தினப்பட்டு வந்திருக்கிறார்கள். அத்தகைய அறிக்கையை இந்தியாவைவிட அதிகக் குதூகலமாக வேறு எந்தத் தேசம் வரவேற்றிருக்க முடியும்? ஆனல் உண்மை வேறு விதமாயிருக்கிறது. யுத்தத்திற்கு முன்பு பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எப்படி அமைதிக்கும் நியாயத்துக்கும் இடைஞ்சலாயிருந்ததோ அதேமாதிரி தான் இன்றுமிருக்கிறது. பிரிட்டிஷார் கொண்டாடும் உரிமைகளுக்கெல்லாம் இந்தியாவின் கோரிக்கை தான் சரியான உறைகல். அந்த உரிமைகளை உறைத்துப் பரீட்சித்துப் பார்த்தோம். எல்லாம் போலியாகவும் பொய்யாகவுமே யிருக்கின்றன.

"150 வருஷ காலமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பிரித்தாளும் முறையைக் கையாண்டு வருகிறது. உள்நாட்டு வித்தியாசங்களை எடுத்துக் காட்டி தனது சக்தியை அதிகரித்துக்கொள்ள பல வகுப்புகளை உபயோகித்துக் கொண்டிருக்கிறது. இந்தியா அடிமைத்தனத்தில் ஆழ்ந்ததற்கு அதுவே இன்றியமையாத காரணம். தனக்கு அடிமையாயிருக்கும் தேசத்தில் ஒற்றுமை நிலவ அந்நிய அரசாங்கம் என்றும் உதவி செய்யாது. அடிமை நாட்டிலிருக்கும் வேற்றுமைதான் அந்நிய அரசாங்கத்தின் ஆதிக்கம் அங்கு வேரூன்றியிருப்பதற்குத் தகுந்த அத்தாக்ஷி. அவர்கள் வேறுவிதமாகச் சொல்லிக்கொண்டிருந்த போதிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இன்னுமிருந்துகொண்டு தானிருக்கிறது. இன்னும் அது ஒழிந்தபாடில்லை.

"நம்முள்ளிருக்கும் வகுப்புப் பிரச்னை முக்கியமானது. தனது ஏகாதிபத்திய முறைகளை இந்தியாவிலிருந்து ஒழித்துவிட பிரிட்டன் விரும்பினல் வகுப்புப் பிரச்னையை சரியாக அது கையாளவேண்டும்.

"வகுப்புப் பிரச்னையின் அம்சங்கள் மொத்தம் மூன்றுதான். வகுப்புப் பிரச்னை யிருக்கும் விஷயம்; அதன் முக்கியத்துவம்; அதைத் தீர்க்கும் முறை; இவைதான் அந்த அம்சங்கள்.

"அந்தப் பிரச்னையைத் தீர்க்கும் விஷயத்தில் எந்தக் கொள்கையைக் கையாண்டால் உசிதமாயிருக்குமோ அந்தக் கொள்கையையே காங்கிரஸ் கையாண்டு மிருக்கிறது. அது கையாளும் வழியை விட உயர்ந்த வழியை யாராவது காட்டக் கூடுமானல், அத்தகைய யோசனையை வரவேற்க என்றும் போல இன்றும் காங்கிரஸ் தயாராக யிருக்கிறது.

"மைனரிட்டிகள் பிரச்னை இந்தியாவுக்கு மட்டில் பிரத்யேகமான தல்ல. இப்பிரச்னைதான் இந்தியாவுக்குச் சுயராஜ்யமளிப்பதற்குத் தடையாக விருப்பதாக உலகம் நம்பும்படி ஏன் செய்யவேண்டும்? அப்படியே மைனரிட்டிப் பிரச்னை இருப்பது உண்மையானல் இந்தியாவின் சுயேச்சையை அங்கீகரித்துப் பரஸ்பர சம்மதத்தின் பேரில் அதை ஒருவழியாக தீர்த்துக் கொள்ள ஏன் பிரிட்டிஷ் சர்க்கார் நமக்குச் சந்தர்ப்பமளிக்க வில்லை?

"பிளவுகளுண்டாகும்படி செய்து நம்மிடையே அவை நிலைத்திருக்கும்படியும் செய்யப்படுகிறது. அதை ஆதாரமாகக் கொண்டே நம்மை ஏளனமும் செய்யப்படுகிறது. வகுப்புச் சச்சரவுகளைத் தீர்த்துக் கொள்ளும்படி நமக்குச் சொல்லப்படுகிறது. ஆனல் அச்சச்சரவுகளை ஒழிக்க நமக்கு சந்தர்ப்பம் கொடுக்க மறுக்கப்படுகிறது. நம்மைப் புறக்கணிக்க வேண்டு மென்றே இது போன்ற நிலைமை கிளப்பிவிடப்பட்டிருக்கிறது. இவைதான் நமது தளைகள். நாம் அதைக் கடந்து செல்ல உறுதி கொண்டிருக்கிறோம்.

"எதிர்காலத்தைபற்றிச் சந்தேகங் கொள்ளும்படியாகவோ அல்லது பயப்படும்படியாகவோ முஸ்லிம்கள் மைனரிட்டியாக விருக்கின்றனரா? சிறிய மைனரிட்டியாக விருந்தால் நியாயமாக பயப்படலாம்; சந்தேகமும் கொள்ளலாம். ஆனல் முஸ்லிம்கள் கலங்கலாமா? முஸ்லிம்கள் அரசியலில் மைனரிட்டிகளாக இருப்பதாகச் சொல்வது உண்மைக்கு மாறனதென்று நான் சொல்லுகின்றேன். ஜனநாயக இந்தியாவில் முஸ்லிம்கள் தங்களுடைய உரிமைகளைப்பற்றியும் நலன்களைப்பற்றியும் பயப்படுவார்களானல் அதுவும் முட்டாள்தனமானதுதான். இந்த அடிப்படையான தவறால் தான் எண்ணிறந்த தப்பு அபிப்பிராயங்கள் தலைகாட்டி விட்டன. தவறான ஆதாரங்களைக் கொண்டு பொய்யான வாதங்கள் தோன்றுகின்றன. அந்தத் தவறால் ஒரு பக்கத்தில் முஸ்லிம்களின் மனத்தில் குழப்பமும், மற்றொரு பக்கத்தில் தப்பு அபிப்பிராயங்களும் ஏற்பட்டு விட்டன. இவற்றால் இந்தியாவின் சரியான நிலை தெரியவில்லை.

"மேற்சொன்ன முறை சரியான பரீட்சையாக விருந்தால் இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் விஷயத்தில் அதை உபயோகித்துப் பார்ப்போம். மேலெழுந்தவாரியாகப் பார்ப்பீர்களானல் தேசமெங்கும் முஸ்லிம்கள் ஏராளமாக விருக்கிறார்கள்; அவர்கள் திடமாக நிமிர்ந்து நிற்கிறார்கள். தாங்கள் ஏகாங்கியாக மைனரிட்டியாக இருப்பதாக யாராவது நினைத்தால் அது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதற் கொப்பாகும்.

"இந்தியாவிலுள்ள முஸ்லிம்களின் எண்ணிக்கை 80 லட்சத்திலிருந்து 90 லட்சம் வரையிலிருக்கும். சமூகப் பிரிவுகளைப் போல அவர்களை அவை பிரிக்கவில்லை. சக்திமிகுந்த இஸ்லாமிய சகோதரத்துவப் பிணைப்புகள் காரணமாயும் சமத்வ உணர்ச்சி காரணமாயும் சமூகப் பிளவால் ஏற்படக்கூடிய பல குறைகளிலிருந்து அவர்கள் பாதுகாக்கப் பட்டிருக்கின்றனர். மொத்த ஜனத்தொகையில் முஸ்லிம்கள் கால் பங்கு தானிருக்கின்றனர் என்பது உண்மையே. முஸ்லிம்களின் ஜனத்தொகை விகிதமல்ல இப்போதுள்ள பிரச்னை; அவர்களுடைய எண் எண்ணிக்கையும், அவர்களுடைய பலமுமேதான் இப்போது பிரச்னை. ஏராளமாகவுள்ள இந்த முஸ்லிம்கள், சுயேச்சையுள்ள ஜனநாயக இந்தியாவில் தங்களுடைய நலன்களையும் உரிமைகளையும் பாதுகாத்துக்கொள்வது சாத்தியமில்லை என்று பயப்பட நியாயமான காரணங்கள் ஏதேனுமிருக்கின்றனவா? முஸ்லிம்கள் ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் மட்டுமில்லாமல் தேசத்தின் பல பாகங்களிலும் இருந்து வருகின்றனர். இந்தியாவில் 11 மாகாணங்கள் இருக்கின்றன. இதில் 4 மாகாணங்களில் முஸ்லிம்கள் மெஜாரிட்டியாக விருக்கின்றனர், அங்கெல்லாம் இதர மதத்தினர் மைனரிட்டிகளாக விருக்கின்றனர். பிரிட்டிஷ் பலுசிஸ்தானத்தையும் சேர்த்துக்கொண்டால் மொத்தம் 5 மாகாணங்களில் முஸ்லிம்கள் மெஜாரிட்டியாக விருக்கின்றனர். தற்போதகூட மத கோஷ்டிகளை ஆதாரமாகக் கொண்டு இப்பிரச்னையைப்பற்றி ஆலோசிக்க நேர்ப்பத்தாலும், முஸ்லிம்களுடைய நிலைமை மைனரிட்டிகளைப்போல் இல்லை. 7 மாகாணங்களில் முஸ்லிம்கள் மைனரிட்டியாக விருந்தால் 5 மாகாணங்களில் அவர்கள் மெஜாரிட்டியாக விருக்கிறார்கள். எனவே முஸ்லிம்கள் தாங்கள் மைனரிட்டியாக விருப்பதாக நினைக்கக் கொஞ்சமும் காரணமே கிடையாது.

"இந்தியாவின் எதிர்கால அரசியலின் விவகாரங்கள் எப்படியிருந்த போதிலும், அவ்வரசியல் அகில இந்திய சமஷ்டியாக இருக்கும் என்பதை நாமறிவோம். அது முற்றிலும் ஜனநாயக முறையிலிருக்கும். ஒவ்வொரு யூனிட்டும் உள்ள விவகாரங்களிலெல்லாம் ஏதேச்சை உடையதாக இருக்கும். மத்திய சமஷ்டி ஆட்சி பொதுவாகவுள்ள அகில இந்திய விவகாரங்கள், அதாவது அயல்நாட்டு உறவு, தற்காப்பு, கடற் சங்கம் முதலியவற்றையே கவனிக்கும்.

"ஜனநாயக அமைப்பின் திட்டமான வேலை முறையில் நல்ல அபிப்பிராயமுடையவர் யாரேனும் மெஜாரிட்டி, மைனரிட்டி என்ற பொய்யான பிரச்னையில் நாட்டாங்கொள்வார்களா? இந்தியாவின் எதிர்கால அமைப்பில் இவற்றிற்கெல்லாம் இடமே இருக்காதென்று நம்புகிறேன். இந்த மாதிரியான பயங்களுக்கெல்லாம் காரணம், பிரிட்டிஷ் ராஜதந்திரி அவ்லார்துபற்றி குறிப்பிட்டதைப் போல நாம் நீந்தவேண்டுமென்ற விருப்பத்துடன் தான் இன்னும் ஆற்றின் கரையில் நிற்கிறோம்; ஆனல் தண்ணீரில் இறங்க விருப்பமில்லை என்பதேயாகும். இதற்கு ஒரே ஒரு பரிகாரமுண்டு; நாம் பயமின்றி இறங்கி விடவேண்டும். இதைச் செய்ததும் நமது பயங்களுக்கெல்லாம் ஆதாரமே கிடையாது என்பதை உணர்ந்து விடுவோம்.

"நான் ஒரு முஸ்லிம். அதில் நான் பெருமையடைகிறேன். நான் ஓர் இந்தியனாகப் பிறந்ததிலும் பெருமையடைகிறேன். பிரிக்க முடியாத இந்திய ஜாதியில் நான் ஒரு பாகம். இந்த உன்னதமான கட்டிடத்திற்கு நான் அவசியம். நான் இல்லாவிடில் இந்தக் கட்டிடம் சோபை அளிக்காது. இந்தியாவை ஆக்கியவர்களில் நான் ஒருவன். அந்த பாத்தியதையை நான் ஒருநாளும் விட்டுக்கொடுக்க முடியாது.

"இந்தியாவில் ஹிந்துமதத்திற்குள்ள பாத்தியம் இஸ்லாத்திற்கும் ஏற்பட்டு விட்டது. ஹிந்து மதமானது பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக இந்தியர்கள் மதமாக இருந்திருப்பின் இஸ்லாமும் ஆயிர வருஷமாக இந்தியர்கள் மதமாகி விட்டது. ஒரு ஹிந்து தான் இந்தியனென்று பெருமையாகச் சொல்லிக் கொண்டு ஹிந்துமதத்தைப்பின்பற்றுவது போலவே நாமும் இந்தியன் என்று சொல்லிக் கொண்டு இஸ்லாமிய மதத்தைப் பின்பற்றலாம். இந்த எல்லையை நான் விரிவுபடுத்துகிறேன். இந்தியக் கிறிஸ்தவர்களும் தாங்கள் இந்தியர்களென்று சொல்லிக் கொண்டு கிறிஸ்தவ மதத்தைப் பின்பற்றலாம். ஒற்றுமை, கட்டுப்பாடு மகாத்மாவின் தலைமையில் நம்பிக்கை இவற்றின் மூலமாகவே நாம் வெற்றிபெறக் கூடும். நமது இயக்கத்தின் பூர்வ பெருமைக்கு அவருடைய தலைமையே காரணம்; எதிர்காலத்திலும் அவருடைய தலைமையிலேயே நாம் வெற்றியைப் பெறக்கூடும். சோதனைக்காலம் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. உலகின் கவனத்தை நாம் ஆக்ரஷித்திருக்கிறோம். அதற்கு நாம் பாத்திரர்கள் தானென்பதை நிரூபணம் செய்ய முயலுவோமாக!"

---

## மார்க்கெட் செய்தி

### லண்டன் ரப்பர்

லண்டன், மார்ச் 18உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு பதினென்றே வீசம் பென்ஸ்

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, மார்ச் 16உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 53½ சதம் |
| ஷீட் ,, | 53½ ,, |
| உ கூப்பன் | 39 ,, |
| ரப்பர் கூப்பன் | 30 ,, |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 41·50 |

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், மார்ச் 16உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 49 வெள்ளி 33½ காசு

### சென்னை மார்க்கெட்

சென்னை, மார்ச் 19உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 27 | 10 | 8 |
| சவரன் (சில்லரையில்) | 27 | 10 | 9 |
| மூசை தோலா 1க்கு | 42 | 0 | 0 |
| வெள்ளி செடி 100 தோலா | 57 | 6 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை , | 0 | 8 | 9 |

## மலாயா செட்டியார்கள் இளைஞர் சங்கம்

24-2-40 காலை 8-30 மணிக்கு நியூ ரியால்டோ தியேட்டரில் இளைஞர் சங்கத்தின் நான்காவது ஆண்டு விழாவும், மகாநாடும் ஆரம்பமாயின. சங்கத்தின் தலைவரான தமிழறம் பேணும் தகைமையாளர் உ. அரு. அருணாசலம் செட்டியார் மகாநாட்டின் தலைவர் திரு. ராம. மு. லெ. இலக்குமணஞ் செட்டியாரையும் வந்திருந்தோரையும் வரவேற்றுச் சொற்பொழிவாற்றியதோடு, சென்ற ஆண்டின் நிகழ்ச்சிகளையும் எடுத்துக் கூறினார். தலைவர் முன்னுரையைக் கூறினார். முன்னுரை முடிந்ததும், திருவாளர்களான மு. ராம. மு. முத்தய்யா செட்டியார் அலோர்க்காஜா, நடராஜன் செட்டியார் கிள்ளான், பெ. ராம. அ. அண்ணாமலை செட்டியார் மலாக்கா, அழ. ராம. கருப்பன் செட்டியார் கோலாலம்பூர், கரு. மு. சுப்பையா செட்டியார் கிள்ளான், உ. அரு. அருணாசலம் செட்டியார் மலாக்கா, அழ. ராம. அழகப்ப செட்டியார் மலாக்கா, ஆகியோர் சொற்பொழிவாற்றினர். சங்க விதிகளில் சில திருத்தங்கள் செய்யப்பட்டன. புது ஆண்டிற்கு அடியிற் கண்டோர் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்:

தலைவர்: திரு. ராம. அழ. சித. அண்ணாமலை செட்டியார் மலாக்கா, உப தலைவர்கள்: திரு. ராம.மு. லெ. லெட்சுமணன் செட்டியார் கிள்ளான். திரு. சா. நா. அ. சொ. சீனிவாசன் செட்டியார் பினாங்கு, காரியதரிசி: திரு. உ. அரு. அருணாசலம் செட்டியார் மலாக்கா, உபகாரியதரிசி: திரு. ப. அ. கருப்பன் செட்டியார் ஈப்போ, நிதியாளர்: திரு. க. வெ. ராம. அழகப்ப செட்டியார் பினாங்கு, கணக்குப் பரிசோதகர்: திரு. அழ. ராம. அழகப்ப செட்டியார் மலாக்கா. நிர்வாக அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின் காரியதரிசி வந்தனம் கூற விழா முடிவுற்றது.

## அறிவிப்பு

1920ம் வருஷத்திய சென்னைப்பட்டணம் ஸ்டாம்பு ஆக்டால் திருத்தப்பட்ட 1899ம் வருஷத்திய இரண்டாவது ஆக்ட் 49வது செக்ஷனில் சொல்லப்பட்டிருக்கும் கெட்டுப்போன ஜுடிஷல், நான் ஜுடிஷல் ஸ்டாம்புகளுக்கு ஷை ஆக்ட் 50 வது செக்ஷனில் சில கேசுகளுக்கு இரண்டு மாதத்திற்குள்ளும், சில கேசுகளுக்கு ஆறு மாதத்திற்குள்ளும் ரீபண்டு மனுக்கள் கொடுத்துக்கொள்ள வேண்டுமென்று (Time limit) காலவரை ஏற்பட்டிருக்கிறது. 50வது செக்ஷன்படி அந்தந்த வாயிதாவுக்குள்ள ஸ்டாம்பு ரீபண்டுக்கு மனுக்கள் செய்துகொள்ள வேண்டும். அப்படி வாயிதாவுக்குள் மனுச் செய்துகொள்ளாமல் வாயிதாக் கழிந்து வரும் ரீபண்டு மனுக்கள் தகுந்த காரணமிருந்தாலொழிய அங்கீகரிக்கப்படமாட்டா என்பது இதனால் பொதுஜனங்களுக்கு அறிவிக்கப்படுகிறது. பொதுஜனங்கள் தங்களுக்கு சட்ட விவரம் தெரியாதென்று சொல்லக் கூடிய காரணங்களும் ஒப்புக்கொள்ளப்பட மாட்டாதென்பதையும் அறியவும்.



## யுத்தச் செலவு தினம் 40 லக்ஷம் பவுன்

பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரியான ஸர் ஜான் சைமன் 70 கோடி பவுன் ஒதுக்கிக் கொடுக்கவேண்டு மென்று காமன்ஸில் பிரேரித்துப் பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்:—கடற்படை, நிலப்படை விமானப்படை, சப்ளை மந்திரி காரியாலயம் இவற்றிற்காக தினம் மொத்தத்தில் சுமார் 40 லக்ஷம் ஸ்டெர்லிங்குகள் (பவுன்) செலவாகின்றது, கடனுக்காகச் செலுத்த வேண்டிய வட்டி, சமூக ஊழியங்களுக்கான செலவுகள், முதலியவற்றை எல்லாம் சேர்த்துக் கணக்கிட்டுப் பார்த்தால் தினம் பிரிட்டன் 65 லக்ஷம் ஸ்டெர்லிங் செலவு செய்து வருகிறது.

## கையால் செய்த காகிதம்

'ஹரிஜன்' பத்திரிகை ஆபீஸில், விற்பனைக்காக 1940 ஜனவரி, பிப்ரவரி மாதங்களில், நாட்டின் பல பாகங்களிலும் இருந்து வாங்கிய கையால் செய்த காகிதம் முதலிய வற்றின் மொத்த மதிப்பு ரூபாய் 4,532-12-6. இதில் 2 மாதங்களிலும் நடந்த விற்பனை ரூ. 3807-8-6. காகிதம் வெட்டவும், கவர் செய்யவும் ரூ 386-0-3 கூலியாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற்கண்ட இரு மாதங்களிலும் 64,338 காகித ஷீட்டுகளும் 62,932 கடிதக் காகிதங்களும், 1,93,659 கவர்களும் 17,148 கார்டுகளும், 164 கார்டுத் தாள்களும், 1,170 பிளாட்டிங் ஷீட்டுகளும், 950 விஸிட்டிங் கார்டுகளும், 708 பைல்களும் விற்பனையாகியிருக்கின்றன.

## நடவடிக்கைகள் தமிழில்

அண்ணாமலை யுனிவர்ஸிட்டி செனட் சபைக் கூட்டத்தில், செனட், ஸிண்டிகேட் நடவடிக்கைகளைத் தமிழில் நடத்த வேண்டுமென்றும் ரிக்கார்டுகளைத் தமிழில் வைக்க வேண்டுமென்றும் ஸ்ரீ ரெங்கசாமி ஐயங்கார் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். 'ஸிண்டிகேட்'டைச் சேர்க்கக் கூடாதென்று தலைவர் (வைஸ் சான்ஸலர் சீனிவாச சாஸ்திரியார்) நிராகரித்தார். தமிழிலோ ஆங்கிலத்திலோ தலைவர் உசிதப்படி நடத்தலாமென்றும், ரிக்கார்டுகளை இங்கிலீஷில் வைக்க வேண்டுமென்றும் திவான் பகதூர் கே. எஸ். ராமசாமி சாஸ்திரியார் திருத்தம் கொண்டு வந்தார். ஸ்ரீ டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரியார் ஆதரித்தார். திருத்தப்பட்டபடி தீர்மானம் நிறைவேறியது.

## முஸ்லிம் பெண்கள் மகாநாடு

முகமூடி யணிந்த சுமார் 2,000 முஸ்லிம் பெண்கள் நாகபுரியில் பீகம் மகமத் அலி தலைமையில் கூடி, மத்திய மாகாணத்திலும் பீராரிலும் சுற்றுப்பிரயாணம் செய்து முஸ்லிம் மாதர் லீக் ஏற்படுத்தப் பிரசாரம் செய்வதற்காகவும் பெண் தொண்டர்படை அமைக்கவும் கமிட்டியொன்றை அமைத்தனர்.

## வேந்தன்பட்டி

இவ்வூர் திருவள்ளுவர் வாசகசாலை இருபது வருஷங்களுக்கு முன் தோற்றுவிக்கப்பட்டு இற்றை நாள்வரை நடந்துவருகிறது. அந்த ஸ்தாபனத்திற்கு கோட்டையூர் ஸ்ரீமான் அ. க. அ. சித. அள. சிதம்பரஞ் செட்டியார் ரேடியோ பெட்டி ஒன்றும் அதன் அங்கமாகிய ஒலிபரப்புக் கருவி ஒன்றும் வாங்கித் தந்து வாசகசாலைக்காக விளக்குகள் இணைத்துத் தருவதற்கும் இசைந்துள்ளார். விளக்குகள் போடுவதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. இப்பெருந் தகையாளர் இதற்கு முன் இவ்வூர் சிவன் கோவிலுக்கு சில பெரியார்களின் வேண்டுகோளுக்கிணங்கி முதன் முதலில் எலக்ட்ரிக் விளக்குகள் இணைப்பதற்கான எல்லாச் செலவுகளையும் ஏற்று இணைத்துத் தந்துள்ளார். இவர்களின் உதார குணமும் பொதுஜனங்களுக்கு நன்மை செய்வதில் ஏற்பட்டிருக்கும் அவாவும் யாவராலும் போற்றத்தக்கதாகும். இரவு நேரங்களில் ரேடியோ சங்கீதம் கேட்பதற்கு ஆண்பாலாரும் பெண்பாலாரும் திரளாகக் கூடி 10 மணி வரையிருந்து கேட்டுச் செல்கின்றனர். (ஒரு நிருபர்)



## 90 வயதில் வக்கீல் பரீட்சை

மௌல்வி அஸ்காலி என்பாருக்கு இப்போது 90 வயதாகியும் அவர் இவ்வருஷம் நடைபெறும் வக்கீல் பரீட்சைக்கு ஆஜராகிறார். இதுவரை அவர் 15 தடவை இப்பரீட்சைக்குப் போய் தவறி யிருக்கிறார்.

## மாண்டிஸோரிக் கல்வி முறை

சென்னை அடையாற்றில் மாண்டிஸோரிக் கல்வி முறைக்கு நிலையான ஸ்தாபனமமைக்கத் தாம் தீர்மானித்திருப்பதாயும், வருஷத்தில் சில காலம் அங்கு தங்கியிருக்கப்போவதாயும் டாக்டர் ஸ்ரீமதி மாண்டிஸோரிப் பத்திரிகைப் பிரதிநிதியிடம் தெரிவித்திருக்கிறார்.



## காரைக்குடி

இராமகிருஷ்ண விவேகானந்தர் சங்கத்தின் நிர்வாகக் கூட்டம் 7-3-40 காலை 9-30 மணிக்கு தலைவர் ஸ்ரீ ராம. சிதம்பரம் தலைமையில் நடைபெற்றது. கட்டாய பாடமாக இருந்த ஹிந்துஸ்தானியை இஷ்டபாடமாக மாற்றிய சென்னை அரசாங்கத்தின் செய்கையைக் கண்டு இச்சங்கம் வருந்துவதுடன், முன்போலவே முதல் மூன்று பாரங்களுக்கும், சட்டாயபாடமாகச்செய்யும்படி சென்னை அரசாங்கத்தை கேட்டுக்கொள்கிறது என்றும், நகரத்தின் ஹிருதய ஸ்தானத்திலிருக்கும் கல்லுக்கட்டி ஊருணி பழுதுபட்ட நிலையிலேயே கிடப்பது மிகவும் அவலட்சணமாகவும் ஆபத்தாகவுமிருப்பதால், இதை விரைவில் சீர்திருத்தி முடிக்கும்படி நகரசபையை இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது என்றும், பாரதிவிழாக் கமிட்டி கணக்கை ஒப்புக்கொண்டு மீதத் தொகையை பாரதி விழாக் கமிட்டி பெயரால்வரவு வைத்துக்கொள்வது என்றும், ஆறு.ஆ. வீதியை வெள்ளைக்கல் மெட்டல் செய்துதரும்படி நகரசபையைக் கேட்டுக்கொள்கிறது என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

**பொது நல ஊழியர் சங்கம்**

13-3-40 அன்று காலை 11 மணிக்கு பொதுநல ஊழியர் சங்கத்தின் சாதாரணக் கூட்டம் ஒன்று ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் தலைமையில் நடைபெற்றது. காரைக்குடி சாத்தப்பா முனிசிபல் பார்க் நன்கொடையாளருள் ஒருவரும் பிரபல முக்கியஸ்தருமான காரைக்குடி முத்துப்பட்டணம் ஸ்ரீ அள. சா. ராம. சா. மு. முத்துராமன் செட்டியார் மரணமடைந்தது குறித்து இச்சங்கம் அனுதாபத்தை தெரிவித்துக்கொள்ளுகிறதென்றும், இன்னும் சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## லெக்ஷிமிபுரம்

இலட்சுமிபுரம் ஸ்ரீ மீனாட்சி சங்கத்தின் மாதக் கூட்டம் 13-3-40 மாலை 4 மணிக்கு ஸ்ரீ எம். இராமநாதய்யர் தலைமையில் நடந்தது. மாணவ மாணவிகள் சொற்பொழிவாற்றினர்.

## சிவகங்கை

10-3-40 ஞாயிற்றுக்கிழமை மாலை நகரக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம், கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஆர். ராமானுஜம் தலைமையில் நடைபெற்றது. சென்னை கவர்னர் சர்க்கார், மதுவிலக்குத் திட்டத்தை விஸ்தரிக்காததற்கும், கட்டாய ஹிந்தியை ரத்துச் செய்ததற்கும், வருத்தம் தெரிவித்தும் மதுவிலக்குத் திட்டம் விஸ்தரிக்கப்படாததால் காங்கிரஸ் மந்திரி சபையால் அதற்கென விதிக்கப்பட்ட, விற்பனை வரி முதலிய புதிக வரிகளை உடனே ரத்துச் செய்ய வேண்டுமென்றும், இவ்வூரில் இதுவரை ராமனாதபுரம் ஜில்லா போர்டாரால், பரிபாலிக்கப்பட்ட இலவச வாசகசாலையை பஞ்சாயத்து போர்டின் பராமரிப்புக்கு மாற்றியதை ரத்துச் செய்து மறுபடி ஜில்லா போர்டின் பராமரிப்பிலேயே வைத்துக்கொள்ள வேண்டுமென்று ராமனாதபுரம் ஜில்லா போர்டைக் கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேறின.



## திருப்பத்தூர்

திருப்பத்தூர் பஞ்சாயத்து போர்டு கடந்த ஒன்றரை வருஷ காலமாக ஸ்பெஷல் ஆபீஸர் நிர்வாகத்திலிருந்தது போர்டுக்கு சமீபத்தில்தான் தேர்தல் நடந்தது. ஒரு ஸ்தானத்திற்குத்தான் போட்டியிருந்தது. போட்டி ஏற்பட்ட 12-வது வார்டில் காங்கிரஸ்வாதியான ஸ்ரீ வயித்திலிங்கம் செட்டியாருடன் போட்டியிட்ட ஸ்ரீ சி. உடையப்ப செட்டியார் தோல்வியடைந்தார். தேர்ந்தெடுக்கப்பட்ட மெம்பர்கள் பின்வருமாறு:திருவாளர்களான காதர்மீரு அம்பலம், பைரவரெத்தினம், சந்திரசேகரம், உசேன் காதர், பக்கீருமுகம்மது ராவுத்தர், பள்ளிகொண்டான், சின்னய்யா, சோமசுந்தரம் சேருவை, விஜயன் சேருவை, நல்லதம்பி சேருவை, மருதபிள்ளை, சிவத்தியா பிள்ளை, ந.பழனிவேலு, வயித்திலிங்கம் செட்டியார், முகம்மதுகாசீம்.

**காங்கிரஸ் கமிட்டி**

திருப்பத்தூர் நகரக் காங்கிரஸ் கமிட்டியின் மாதாந்தரக் கூட்டம் 11-3-40 மாலை 6 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் தலைவர் ஸ்ரீ கே. கிட்டு வய்யர் தலைமையில் நடந்தது. கணக்குகள் அங்கீகரிக்கப்பட்டன. திருப்பத்தூர் பஞ்சாயத்துப்போர்டுத் தலைவர் தேர்தலைசீக்கிரம் நடத்தும்படி தந்தி மூலம் அதிகாரிகளுக்குத் தெரிவிப்பதென்றும், இவ்வூர் ஆரம்பப்பாடசாலையை வேறு நல்ல இடத்திற்கு மாற்றவேண்டுமென்றும், கண்டரமாணிக்கம் ரோட்டில் அம்மன் கோவில் ஊருணிக்கரை மிகவும் ஆபத்தாக இருப்பதால் அதற்கு கல்வரி எடுக்க வேண்டுமென்று ஜில்லா போர்டுக்கு எழுதுவதென்றும் தீர்மானிக்கப்பட்டன.

**ஆண்டுவிழா**

இவ்வூரிலுள்ள நாகப்பா-மருதப்பாபோர்டு மிடில் ஸ்கூல் மாணவர் ஆசிரியர் சங்கங்களின் 2 வது ஆண்டுப் பூர்த்திக் கொண்டாட்டங்கள் மார்ச்சு 11உ மாலை 6 மணிக்கு கலாசாலை விளையாடும் மைதானத்தில் இராமநாதபுரம் ஜில்லாக் கல்வி அதிகாரி ஸ்ரீ எம். ஆர். சுப்பிரமணிய அய்யர் பி. ஏ. எல். டி. தலைமையில் நடைபெற்றன. தலைவர் முகவுரை கூறிய பின் இரண்டு சங்கங்களின் அறிக்கைகளும் சங்கக் காரியதரிசிகளால் படிக்கப்பட்டன. மாணவர் மாணவிகளால் தமிழிலும், ஆங்கிலத்திலும் சம்பாஷணைகள், நடிப்புகள், கும்மி, கோலாட்டங்கள் முதலியன நடத்தப்பட்டன. ஆசிரியர்கள் ஷேக்ஸ்பியர் இயற்றிய ஜூலியஸ்ஸீஸர் நாடகத்தில் ஒரு காட்சியையும், தமிழில் ஒரு ஹாஸ்ய நாடகத்தையும் நடித்தனர். தலைவர் தமது அபிப்பிராயங்களைக் கூறி, மாணவ மாணவிகளுக்கு கலாசாலை நன்கொடையாளர்களான நாகப்ப பிள்ளை குடும்பத்தினர் வழங்கிய பரிசுகளைக் கொடுத்தார். வந்தனோபசாரத்திற்குப் பின் கூட்டம் முடிவுற்றது.

## குப்பையின் மூலம் கோடி ரூபாய்

இன்று பிரிட்டனில் கிராமங்களிலும் நகரங்களிலும் உள்ள குப்பைத் தொட்டிகளில் விழும் குப்பையை வீணுக்காமல் சேமித்து மாற்றுகள் மூலம் தேவையான பொருள்களை உற்பத்தி செய்தால் அதனுல் மட்டும் வருஷ வாரியில் சுமார் 13 லட்சம் பவுன்கள் வருமானம் கிடைக்கும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

குப்பைக் கூளங்களை குப்பைத் தொட்டியினின்று திரட்டிச் சென்று இதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள பிரத்தியேகமான யந்திரங்கள் மூலம் தகரம், கண்ணுடி, பேப்பர், இரும்பு, ரப்பிஷ், கந்தல் முதலியவற்றைத் தனித்தனியாகப் பிரித்து பிறகு தேவையான கருவிகளைத் தயாரித்துக் கொள்ளுகிறார்கள், டாகன்ஹாமில் இத்திட்டம் வெற்றிகரமாக நடத்தப்படுகிறது.

### காரைக்குடியில் இரண்டு சகாய நாடகங்கள்

(நமது நிருபர்)

தேவகோட்டை ராம்நகர் சிசு சம்ரக்ஷண சாலையின் நிதிக்காக காரைக்குடி ஷண்முக விலாஸ் தியேட்டரில் மார்ச்மீ 15,17 தேதிகளில் வள்ளி திருமணம், பவளக்கொடி நாடகங்கள் நடத்தப்பெற்றன. இரண்டு நாடகங்களுக்கும் தேவகோட்டை சப் கலெக்டர் ஸ்ரீ M. S. சிவராமன் ஐ. ஸி. எஸ். அவர்கள் விஜயம் செய்திருந்தார். பிரபல நடிகர் ஸ்ரீ M. K. தியாகராஜ பாகவதர் இரண்டு நாடகங்களுக்கும் முக்கிய வேடந்தாங்கி மிகத் திறமையாக நடித்தார். ஸ்ரீ K. S. தேவுடு அய்யர் தமது இனிய கானத்தால் எல்லோரையும் மகிழ்வித்தார். இரண்டாவது நாடகத்துக்குத் தான் கூட்டம் மிக அதிகம். இடம் கிடைக்காமல் பலர் வீடு திரும்பினர். அன்று ஸ்திரிகள் பகுதியில் மட்டும் சுமார் 700 பேர்கள் இருக்கலாம். அதில் 80 சதவிகிதம் தனவணிகப் பெண்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

காரைக்குடி முனிஸிபல் கமிஷனர் திரு. புருஷோத்தம் நடிகர்களுக்கும் வந்திருந்தோருக்கும் நன்றி கூறும் பொழுது, தற்காலம் சினிமா மோகத்தால் நாடகக் கலைக்குச் சிறிது பங்கம் ஏற்பட்டிருக்கிறதென்றும் இந்தக் குறையை ஸ்ரீ பாகவதர் முன்வந்து நிவர்த்தி செய்து நாடகக்கலையை அபிவிருத்தி செய்ய பாடுபடவேண்டுமென்றும் குறிப்பிட்டார். பிறகு கலெக்ட்டர் ஸ்ரீ தியாகராஜ பாகவதருக்கு மலர் மாலை யணிவித்தார்.

காரைக்குடி முனிஸிபல் கமிஷனர் திரு. டி. புருஷோத்தம் அவர்களும் டாக்டர் ரத்னசாமி அவர்களும் சிறந்த முயற்சி எடுத்துக் கொண்டு இரண்டு நாடகங்களையும் வெற்றிகரமாக நடத்திவைத்தது பாராட்டத்தக்கது. இரண்டு நாடகங்களுக்கும் சுமார் ரூ 3000 வசூலாகி யிருக்கக் கூடுமென சொல்லப்படுகிறது.

## நோட்டீஸ்

### தேவகோட்டை டி. முன்சிப் கோர்ட்டு

1940ஞ O. P. No 5

கண்டனூரிலிருக்கும் தெ. அரு. சித. கரு. ராம. ராமனுதன் செட்டியார் என்ற சிதம்பரம் செட்டியார் } மனுதார்.

ஷை நிம்பரில் மனுதாரின் சுவீகார தகப்பனுர் இறந்து போன தெ. அரு. சித. கரு. ராமனுதன் செட்டியாருக்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்யும் பொருட்டு மனுதார் வார்சு சர்ட்டிபிகேட்டு கோறி போட்டிருக்கும் மனுவுக்கு கோர்ட்டில் 30-3-40உ வாய்தா ஏற்பட்டிருப்பதால் அதற்கு ஆக்ஷேபணையுள்ளவர்கள் கோர்ட்டில் ஷை தினத்தில் ஆஜருகி தங்கள் ஆக்ஷேபணையை தெறிவித்துக் கொள்ள வேணுமென்பதை இதன் மூலம் அறிவிக்கப்படுகிறது.

G. Raghava Iyengar,
மனுதார் வக்கீல்,

தேவகோட்டை } 19—3—40.



### பினுமித் தலைவரின் கதி

பின்லந்தில் ஏற்பட்ட பினுமி சர்க்காரின் தலைவரான ஆட்டோகியுசினன், யுத்தத்திற்கு முன் பின்னிஷ் நிலைபற்றி ரஷ்ய சர்க்காருக்குத் தவறுன தகவலைக் கொடுத்த காரணத்திற்காக ஸ்டாலினின் கோபத்திற்குள்ளாகி சுட்டுக்கொல்லும்படி உத்தரவிடப்பட்டதாகத் தெரிகிறது.

### கூட்டுத் தற்காப்பு

ஸ்வீடன், நார்வே, பின்லந்து, இம்மூன்று நாடுகளும் ஒரு கூட்டுத் தற்காப்பு உடன்படிக்கை செய்து கொள்வது சம்பந்தமாக அவற்றின் பிரதிநிதிகளைக் கொண்ட மகாநாடு நடைபெறலாமெனத் தெரிகிறது.

### இத்தாலி-ஜெர்மனி நிலக்கரி ஒப்பந்தம்

இத்தாலியும் ஜெர்மனியும் நிலக்கரி ஒப்பந்தமொன்றைச் செய்துகொண்டிருக்கின்றன. இதனுல் இத்தாலியின் நிலக்கரித் தேவை ஏறக் குறைய பூரணமாகப் பூர்த்தியாகுமாம்.

### பெண்களுக்கு கட்டாய இலவசக்கல்வி

அடுத்த ஏப்ரல்மீ 1உ முதல் சிட்டகாங் முனிசிபல் எல்லைக்குள்ளாக 6 முதல் 10 வயதுள்ள பெண்களுக்கு கட்டாய ஆரம்பக் கல்வி இலவசமாக அளிக்கப்படும். 1926ம் வருஷத்திலிருந்து பையன்களுக்கு கட்டாய ஆரம்பக் கல்வி இலவசமாக அளிக்கப்பட்டு வருகிறது.

### இலங்கை நெருக்கடி தீர்ந்தது
#### மந்திரிகள் பதவி ஏற்றனர்

மார்ச் 13உ யன்று சட்டசபைக்கு கவர்னர் அனுப்பிய மகஜரில் கண்டபடி அரசியல் பிரச்னை தீர்க்கப்பட்டு விட்டது. இதனுல் 16உ யன்று மந்திரிகள் தங்கள் வேலைக்குத் திரும்பி வந்தனர். பிரமாணம் செய்து மந்திரிப் பதவியை ஏற்றனர்.

### அன்புமார்க்க சங்கம் கொழும்பு

கொழும்பு அன்புமார்க்க சங்கத்தினுதரவில் மார்ச் 24உ ஞாயிற்றுக்கிழமை கொழும்பு விவேகானந்த சபை மண்டபத்தில் அன்பு மகாநாடும், கொழும்பு அன்புமார்க்க சங்கத்தின் மூன்றும் ஆண்டு விழாவும் நடைபெறும்.



## பர்மா சட்ட சபையில் குடியாண்மைச் சட்டம்

### அந்நியர் பதிவு மசோதா நிறைவேறியது

### பர்மாவில் அந்நியர் பதிவு மசோதா

பிப்ரவரி 26உ யன்று பர்மா ஜனப்பிரதிநிதி சபையில் பிரதம மந்திரி ஊ-பூ வால் கொண்டுவரப்பட்ட அந்நியர் பதிவு மசோதா நிறைவேறியது. இந்த மசோதா, பர்மாவில் எத்தனை அந்நியர் எங்கெங்கு வசிக்கிறார்கள் என்ற விவரங்களைப் பதிவு செய்து கொள்ளவும், அந்த அந்நியர் தங்களின் போக்குவரத்துக்களை உடனுக்குடன் தெரியப்படுத்தவும் வேண்டுமெனக் குறிப்பிடுகிறது.

### இரங்கூன் நகர முனிசிபல் திருத்த மசோதா

பிப்ரவரி 21உ பர்மா ஜனப்பிரதிநிதி சபையில் இரங்கூன் நகர முனிசிபல் திருத்த மசோதாவின் செலக்ட் கமிட்டியினரின் அறிக்கை ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இரங்கூன் நகர சபை அங்கத்தினர்கள் தொகையை அதிகரிக்க வேண்டுமென்பதும் அங்கத்தினர்களில் சரிபாதி பர்மியர்களாக இருக்க வேண்டுமென்பதும் மசோதாவின் முக்கிய நோக்கமாகும். மசோதா பெரும்பான்மையோரது ஆதரவு பெற்று நிறைவேறியது. ஐரோப்பியர்களும் இந்தியர்களும் மசோதாவை எதிர்த்து வோட்டளித்தனர்.

பர்மா வர்த்தக சங்கப் பிரதிநிதியான திரு. ஜே. ஜ. நெல்சன் இம்மசோதாவை எதிர்த்துப் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"இரங்கூனில் முதலிலிருந்தே மூன்றில் இரு பகுதிகளுக் கதிகமாக பர்மியரல்லாதார்களிலிருந்து வருகிறார்கள். இரங்கூன் நகர சபைக்கு வசூலாகும் வருமானத்தில் 89 சத விகிதம் அந்த பழமையான பர்மியரல்லாதாராலேயே அளிக்கப் பெறுகிறது. தற்போதய நிலைமையில் இரங்கூன் நகர சபையில் பர்மியர்கள் பெற்றிருக்கும் பிரதிநிதித்துவம் எந்த விதத்திலும் குறைபாடுடையதன்று. மொத்த அங்கத்தினர்கள் தொகையில் பர்மியர்கள் ஐந்தில் இரு பகுதியினர் இருக்கின்றனர். ஆனுல் நகரத்தின் ஜனத்தொகையில் பர்மியர்கள் மூன்றில் ஒரு பகுதிக்கும் குறைவாயிருக்கின்றனர். அவர்கள் வரி மூலம் செலுத்துவது 11 சத விகிதம்தான். இவ்விதம் சட்டத்தைத் திருத்துவதால் பலவித இன்னல்கள்தான் உண்டாகும்."

### குடியாண்மைச் சட்டம்

பர்மா குடியாண்மைச் சட்டம் 1938 ஆகஸ்ட்டு மாதத்தில் ஜனப்பிரதிநிதி சபையில் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. 1939 மார்ச் மீ 30உயன்று சட்டமாக நிறைவேறியது. 1939 ஏப்ரல் 24உ கவர்னரது அங்கீகாரத்தைப் பெற்றது. அதற்குப் பிறகு இதை அரசாங்கத்தார் அமுலுக்குக் கொண்டுவந்தனர். அமுலுக்குக் கொண்டுவரும் பொழுது ஏற்பட்ட பலவிதத் தொல்லைகளும் நிலச்சுவான்தார்களுக்கு நேரிட்ட கஷ்டங்களும், இது சம்பந்தமாக ஹைக்கோர்ட்டில் நடந்த வழக்கும், தீர்ப்பும் ஏற்கனவே குமரனில் வெளியாகியிருக்கின்றன.

ஜனப் பிரதிநிதி சபையில் மார்ச் 5உ குடியாண்மைச் சட்டம் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்தச் சட்டத்தின்மீது ஊ-பாவின் கொண்டுவந்த தீர்மானம் பின் வருமாறு:—

(அ) "இந்த வருடம் நிலச்சுவான்தார்கள், விவசாயிகள் ஆகியவர்களிடையே சேவா சம்பந்தமாகத் தோன்றியுள்ள சச்சரவுகளை ஒவ்வொரு பகுதியிலும் நிலச்சுவான்தார்கள் விவசாயிகள் ஆகிய இரு சாராரும் அடங்கிய கமிட்டிகளை நியமித்து செட்டில்மெண்ட் செய்வதற்கு உடனே உத்தரவுகளைப் பிறப்பிக்க வேண்டுமென்று இச்சபை அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்கிறது."

(ஆ) "குடியாண்மைச் சட்டத்தின் மூல நோக்கங்களையும், லட்சியங்களையும் அடைவதற்கு எத்தகைய முக்கிய மாற்றங்களையும், திருத்தங்களையும் செய்யவேண்டுமென்பதை யறிந்து சிபார்சு செய்வதற்காக, இச்சட்டம் எப்படி அமுலில் நடக்கிறதென்பதை விசாரணை செய்யவேண்டி இரு சட்டசபை அங்கத்தினர்கள்—அனுபவம் மிகுந்த செட்டில்மெண்டு உத்தியோகஸ்தர்கள் ஆகியோர் அடங்கிய கமிட்டியொன்றை நியமிக்க இச்சபை அரசாங்கத்திற்குச் சிபார்சு செய்கிறது."

இத்தீர்மானத்தின் மீது பலத்த விவாதம் நடைபெற்றது. விவாதத்தில் கலந்து கொண்ட அங்கத்தினர்களில் பெரும்பாலோர், சேவா நிர்ணய உத்தியோகஸ்தர்கள் சட்ட ஷாத்துகளின்படி நடவாமையினுலேயும் மற்றும் பலவித காரணங்களினுலேயும் நிலச்சுவான்தார்களுக்கு ஏற்பட்ட மகத்தான கஷ்டத்தை எடுத்துக் காட்டினுர்கள்.

திரு. அ. மு. மு. வெள்ளையன் செட்டியார் தமது நீண்ட சொற்பொழிவில் நிலச்சுவான்தார்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களை புள்ளி விவரங்களுடன் விளக்கிக் காட்டினுர்.

அரசாங்கத்தின் சார்பாக விவாதத்திற்குப் பதிலளித்த நில-ரெவினியூ மந்திரி சர்-பா-டுன் பைஞன்ஷியல் கமிஷனரும், சேவா நிர்ணய உத்தியோகஸ்தர்களும் இழைத்த தவறுதல்களை ஒத்துக் கொண்டார். இச்சட்டத்தை நிறுத்தி வைக்க அரசாங்கத்திற்கு அதிகாரமில்லையென்று தெரிவித்தார்.

ஊ-பா வின் கொண்டுவந்த தீர்மானத்தின் இரண்டாவது பகுதி ஏகமனதாக நிறைவேறியது.

### புதுக்கோட்டை மகாராஜா

வட இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்த புதுக்கோட்டை மகாராஜா மார்ச் 9உ புதுக்கோட்டை வந்து சேர்ந்தார்.

## உள் நாடு

★

### திருச்சிறுப்பள்ளி

செட்டிமார் நாட்டு மாணவர் கழகத்தின் 3-வது ஆண்டு விழா மார்ச் 10௨ மாலே 4-மணிக்கு தேசியக் கல்லூரி சரஸ்வதி கூடத்தில் திரு. என். ஹாலாஸ்யம் அய்யர் பி. ஏ; பி. எல்., எம். எல். ஏ. தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் வித்துவான் எஸ். கணபதி அய்யர் பி. ஏ; திரு. ஏ. ஹிருதசுவாமி எம். ஏ. பி. எல்; ஆகியோர் சொற்பொழிவு ஆற்றினர். பேச்சுப் போட்டி, பாட்டுப் போட்டி, மாறுவேடப் போட்டி முதலியவைகளில் வெற்றிபெற்ற அங்கத்தினர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. கூட்டம் வந்தனோபசாரத்துடன் நிறைவேறியது.

### புதுவயல்

சரஸ்வதி வித்தியாசாலே பெற்றோர்கள் சங்கக் கூட்டம் 10-3-40 ஞாயிற்றுக்கிழமை மாலே 4-30 மணிக்கு இராமனுதபுரம் ஜில்லா கல்வி அதிகாரி ஸ்ரீ M. R. சுப்பிரமணியம் B. A. L. T. தலைமையில் டை வித்தியாசாலேயில் நடைபெற்றது. அவ்வமயம் ச. வி. மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு, நடிப்பு, கும்மி, கோலாட்டம் முதலியவைகளுக்குப் பின்பு, திருவாளர்கள் சுப.நாராயணஞ் செட்டியார், திருப்பத்தூர் ரேஞ்சு கல்வி இலாக்கா டிப்டி இன்ஸ்பெக்டர் திரு. ஏ. தியாகராஜ ஐயர் B. A. L. T. ஆகியோர் பெற்றோர்களின் கடமைகளைப்பற்றிப் பேசிய பின்பு தலைவர் முடிப்புரையுடன் கூட்டம் நிறைவெய்தியது.

### ஆத்தங்குடி

மார்ச் 15௨ மாலே 3மணிக்கு ஸ்வாமி எயிடட்எலிமெண்டரிப் பாடசாலேமாணவ மாணவிகளின் பெற்றோர் சங்கக்கூட்டம் ஸ்ரீ சு. வீர. கதிரேசன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீஜே. சுவாமிநாத அய்யர் "ஆசிரியர்களும் மாணவர்களும்" என்பது பற்றிப் பேசினர்.





## உள் நாடு

★

### இராயவரம்

விவேகானந்தர் வாசகசாலேயில் மார்ச்11௨ திங்கட்கிழமை மாலே 5 மணிக்கு பாரதி சங்கத்தில் ஸ்ரீ கே.ஆர்.சங்கரஐயர் தலைமையில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தினம் கொண்டாடப்பட்டது. திருச்சி கே. தங்கம்பரமானந்தா யோகாப்பியாசம் செய்து காண்பித்தார். விவேகானந்தாவின் நுண்ணிய போதனைகள்பற்றி. சுவாமி ஹன்சாவும், ஆசிரியர் எஸ். நடேச ஐயரும் பேசினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் வந்தனங்கூறக் கூட்டம் முடிவுற்றது.

### நாட்டரசன்கோட்டை

நாட்டரசன்கோட்டை திரிசாரணப் படையைச் சேர்ந்த பன்னிருவர் ராமேஸ்வரம், தனுஷ்கோடி இடங்களில் சிவராத்திரி உத்ஸவத்தை முன்னிட்டு ராமேஸ்வரம் தேவஸ்தான எக்ஸிகியூடிவ் ஆபீசர் வேண்டுகோளின்படி இம்மாதம் 6 முதல் 3௨ வரை தொண்டாற்றினர்.

### தேவகோட்டை

தேவகோட்டை தாலூகா காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் 3-3-40 ஞாயிற்றுக்கிழமை காலே திருவாடானே காரனேஷன் கட்டிடத்தில் ஸ்ரீ ஏ. இராமனுதத் தேவர் தலைமையில் நடைபெற்றது. தாலூகா அரசியல் மகாநாடு நடத்துவதற்கான நடவடிக்கைகளே சீக்கிரம் எடுத்துக்கொள்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

### கோவிலூர்

புதிய ஆண்டிற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கிராமக் காங்கிரஸ் கமிட்டி உத்தியோகஸ்தர்கள் பின் வருமாறு:—

தலைவர்: ஸ்ரீ சா. நடராஜன்; காரியதரிசி: ஸ்ரீ கதி. சிவராமன்; உபகாரியதரிசி: ஸ்ரீ சி. வீராச்சாமி, பொக்கிஷதார்: ஸ்ரீ பெரி. சி. பொன்னேயா.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company, Ltd. at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

